KALKI
4.2.2007 ரூ.8.00
80 பக்கங்கள்

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...



## பாபா உணர்த்திய பாடம்!

**Team Health Shoppe**
**For Wellness**

# டீம் சோற்றுக் கற்றாழை ஜூஸ்

Team Aloe-Vera JUICE

இயற்கை நமக்கு அளித்த விலை மதிக்க முடியாத கொடை சோற்றுக் கற்றாழை என்னும் மூலிகை. மருத்துவ குணங்கள் கொண்ட இந்த மூலிகையில் அமினோ அமிலங்கள், வைட்டமின்கள், கனிமங்கள், அத்யாவசிய எண்ணெய்கள், உயிர்வினை ஊக்கிகள் உள்ளிட்ட உடலுக்குத் தேவையான நோய் எதிர்ப்பு சக்திகள் அனைத்தும் உள்ளன.




**டீம் சோற்றுக் கற்றாழை ஜூஸ்**

- இதிலுள்ள ஊட்டச் சத்துகளைப் பாதுகாக்க குளிர் நிலை செய்முறை தொழில்நுட்பம் மட்டுமே பயன்படுத்தப்படுகிறது.
- நன்கு பதப்படுத்தப்பட்ட முதிர்ந்த இலைகளில் இருந்து ஜூஸ் தயாரிக்கப்படுகிறது.
- தண்ணீர், வாசனைத் திரவியங்கள் மற்றும் வண்ணங்கள் எதுவும் கலக்கப்படுவதில்லை.
- ஊட்டச்சத்துகளின் வீரியம் 100% நிலைப்படுத்தப்பட்டுள்ளது




## TEAM EUBIO CARE

[DIVISION OF CHEMFAB ALKALIS LIMITED]

**VANDALUR** - Team House, GST Road, Chennai-600 048, Phone : 22750502

**ANNA NAGAR** - Plot 1200, Z Block, 6th Avenue, Chennai - 600 040 [Opp Kokino Karate School] Phone - 42693332

**ADAYAR** - Shop No.26, Ground Floor, Corporation Shopping Complex, III Avenue, Indira Nagar, Chennai 600 020, Ph : 4269 5115

**For Trade enquires Contact**
teamhealthshoppe@drraoholdings.com
Team Health Shoppe, Team House,
GST Road, Vandalur, Chennai - 600 048




E-mail : teamhealthshoppe@drraoholdings.com Web : www.teamhealthshoppe.com

# கல்கி

4.2.2007

ஸ்டேட் ஃபர்ஸ்ட் மாணவியின் +2 டிப்ஸ்! 42

பிரபஞ்சன் சிறப்புச் சிறுகதை 52



சக்தியின் ஸேனை! 76

தவிக்கும் சென்னை அ.தி.மு.க. எம்.எல்.ஏ.க்கள்! 65

கிட்னி தானம்... சட்டம் என்ன சொல்கிறது? 12

ஜோதிகா-சூர்யா புதிய அவதாரம் - 33




பாபா உணர்த்திய பாடம் - 14

## இசை

# ஏழு ஸ்வரங்கள்

டி.எம்.கிருஷ்ணாவின் ரசிகர்கள் + பாம்பே ஜெயஸ்ரீயின் ரசிகர்கள்... கேட்க வேண்டுமா...? நிகழ்ச்சி ஏழு மணிக்கு ஆரம்பிக்கும் முன்பே அகாடமி அரங்கம் ஹவுஸ்ஃபுல்.



• புத்தகத்தை வெளியிடும் கலாமுடன் டி.எம்.கிருஷ்ணா, ஜெயஸ்ரீ

இத்தனைக்கும் அன்றைய நிகழ்ச்சிக்கான அழைப்பிதழும் விளம்பரங்களும் 'புத்தக வெளியீட்டு விழா' என்றே அறிவித்தன. நடந்ததென்னவோ ஒரு வண்ணமிகு இசை நிகழ்ச்சியுடனிணைந்த நூல் வெளியீடு!

ரவிகிரண், ராஜ்குமார் பாரதி, சௌம்யா, கன்யாகுமரி, குருவாயூர் துரை போன்ற இசைக் கலைஞர்களிடம் பயிலும் மிக இளம் குழந்தைகள் ஒரு மினி கச்சேரி நடத்த, கிருஷ்ணாவும் ஜெயஸ்ரீயும் பாடல்களுக்கிடையே மாறி மாறி மேடையில் தோன்றி, 'அந்தக் கால' இசைமேதைகளைப் பற்றிச் சுருக்கமாகப் பேசி பவர் பாயிண்ட் உதவியுடன் அறிமுகம் செய்தார்கள்.

வெளியிடப்பட்ட 'Voices Within Carnatic Music' என்ற ஆங்கில நூல், நிகழ்ச்சியில் அறிமுகம் செய்துவைக்கப்பட்ட ஏழு இசை மேதைகளைப் பற்றியதே. அரியக்குடி முதலான அந்த ஏழு மூத்த கலைஞர்களின் பங்களிப்பு இன்று கர்நாடக இசை உலகை ஆட்கொண்டிருப்பதை உணர்த்த, புத்தகம். அடுத்தடுத்த தலைமுறைகளிலும் அந்த ஏழு பேரின் பங்களிப்பு இடையறாது தொடரும் என்பதைக் காட்ட, சிறுவர்களைக் கொண்டு அமைத்த கச்சேரி! கச்சேரிக்குத் தேர்வு செய்யப்பட்ட பாடல்களும்கூட அந்த ஏழு இசை மேதைகளின் தொடர்பை உணர்த்தும் வகையில் அமைந்திருந்தன. (உதாரணமாக, டி.என்.ராஜரத்தினத்தின் பங்களிப்பைக் குறிக்க தோடி ஆலாபனை; எம்.எஸ்.ஸுக்கு ப்ருஹி முகுந்தேதி)

சிறுவர் சிறுமியர் சிரத்தை - உற்சாகத்துடன் வழங்கிய இசை நிகழ்ச்சி நெகிழச் செய்தது. மொத்த நிகழ்ச்சியின் அழகியலுணர்வு மகிழச் செய்தது.

நூலின் முதல் பிரதி ஐம்பதாயிரம் ரூபாய்க்கு ஏலம் போயிற்று! தொகை, மாறுபட்ட குழந்தைகளுக்கான சிறப்புப் பயிற்சிக் கூடம் நடத்தும் வித்யாசாகர் அமைப்புக்கு வழங்கப்பட்டது.

இந்தப் புத்தகத்தைப் பற்றி அதன் 'இணை' ஆசிரியர்களான கிருஷ்ணாவும் ஜெயஸ்ரீயும் நம்மிடம் கூறியவை:

• "புத்தாயிரம் ஆண்டு (2000) பிறந்த தினத்தில் ஒய்.ஏ.சி.எம். அமைப்பு கர்நாடக இசையுலகின் வரலாறு குறித்த பிரம்மாண்ட நிகழ்ச்சி ஒன்றை நடத்தியது. அந்த நிகழ்ச்சிதான் இந்தப் புத்தகத்துக்கு விதை. அந்நிகழ்ச்சிக்காகத் திரட்டிய ஆவணங்கள், படங்கள், அன்றைய நிகழ்ச்சி தந்த உற்சாகம், தூண்டுதல்

எல்லாவற்றையும் வைத்துக்கொண்டு, மேலும் தேடி, ஐந்து வருடங்கள் உழைத்தோம்.

● இந்தப் புத்தகத்தை எங்களுடன் சேர்ந்து எழுதிய மூன்றாவது நபர் மைதிலி சந்திரசேகர், JWT விளம்பர நிறுவனத்தின் வைஸ் - பிரசிடெண்ட், இசை வட்டத்துக்கு வெளியே இருப்பவர். அவருக்கு கர்நாடக இசையைப் பற்றி சுத்தமாக எதுவும் தெரியாது. அதனாலேயே அவரைச் சேர்த்துக் கொண்டோம்.

● ஆர்.கே.ஸ்ரீராம்குமார்தான் வெளியீட்டு நிகழ்ச்சியில் பாடிய குழந்தைகளுக்குப் பயிற்சி அளித்து, எங்களுடன் சேர்ந்து அவர்களைத் தயார் செய்தார்.

● புத்தக விற்பனையின் மூலம் வெளியீட்டு தொகையை (பிரதி விலை ரூ.1900- யப்பாடி!) 'மாத்ருகா' என்ற எங்கள் அமைப்பின் வாயிலாக, கர்நாடக இசையைப் பரப்பும் பணிக்கு, குறிப்பாகக் குழந்தைகளிடையேயும், பள்ளிகளுக்கும் கொண்டு செல்லப் பயன்படுத்துவோம். தமிழ்நாட்டில் கிராமப்புறங்களிலும் இசை போய்ச்

# ஏழு குரல்கள்

சேர விரும்புகிறோம். இசை மட்டும் அல்ல, கிராமப்புறக் கலைகள், பாரம்பரியக் கலைகள் எல்லாம் மறுவாழ்வு பெறவும், பரவவும் இத்தொகையைப் பயன்படுத்தத் திட்டமிட்டிருக்கிறோம். அந்த அளவுக்குப் புத்தகம் விற்பனை ஆக வேண்டும் என்று விரும்புகிறோம்.

● குடியரசுத் தலைவர் அப்துல்கலாம் புத்தகத்தை வெளியிட வேண்டும் என்று கேட்டுக் கடிதம் எழுதிய உடனேயே, அவர் பதில் அனுப்பினார். ஜனவரி 12ஆம் தேதி ராஷ்ட்ரபதி பவனிலேயே வெளியிட்டார். அப்போது டாக்டர் கலாம் எங்கள் இருவரையும் பாடச் சொன்னார். சேர்ந்து பாடினோம்.

'இன்று இரவே புத்தகத்தைப் படித்து முடித்து விடுவேன்' என்று முகம் மலரப் பேசிய டாக்டர் கலாம், 'இந்த கான்செப்டே அழகாக இருக்கிறது. ஆனந்தமாக இருக்கிறது!' என்று வாழ்த்தினார்.

- சாருகேசி





**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர் :
லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி
தலைமை உதவி ஆசிரியர் :
மு.மாறன்
வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன், பி.ஆர். ராஜன்
எம். மோகன், ச. கார்த்திகேயன்
தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324
தொலைநகல் :
044 - 22251021
மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com
சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

# பாபா

சென்ற வருடம் ஆகஸ்ட் மாதம் 19ஆம் தேதி புட்டபர்த்தி பிரஸாந்தி நிலையத்தில் ஸ்ரீ சத்யசாய் பாபா பேசும்போது, ''உலக அமைதிக்காகவும், செழிப்பு நிலவவும் சென்னையில் 'அதி ருத்ர மஹா யக்ஞம்' நடத்தப் போகி றேன்'' என்று கூறி தமிழ்நாட்டு பக்தர் களுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தார். அதன்படி, இப்போது சென்னை விஜயம் - பத்தாண்டுகளுக்குப் பிறகு.

★ ஆந்திராவில் மூன்று மாவட்டங் களின் குடிதண்ணீர்த் தேவையை முழுமையாகப் பூர்த்தி செய்த சாயி அறக்கட்டளை, சென்னைக்கு கிருஷ்ணா நீரைச் சுமந்து வரும் கண்டலேறு, பூண்டிக் கால்வாய்க் கரைகளை இருநூறு கோடி செலவில் பலப்படுத்தியதன் மூலம், முதன்முறையாக தமிழகத்துக்குச் சரியான அளவில் நீர் வந்திருக்கிறது. 'இந்தக் காரியத்தை முடித்துவிட்டுத்தான் சென்னை செல்ல வேண்டும்' என்று உறுதியாக இருந்தாராம் பாபா. அதனால் தான் இந்த இடைவெளி.

★ சென்னையில் எந்த இடத்தில் யக் ஞத்தை நடத்துவது என்று யோசித்த போது, திருவான்மியூர், டாக்டர் வாசு தேவன் நகரில் உள்ள தங்களது பத்து ஏக்கர் நிலத்தை இலவசமாகத் தந்திருக் கிறது ராமச்சந்திரா மருத்துவக் கல்லூரி நிர்வாகம்.

★ பொட்டல் காடாக இருந்த நிலத்தை அறுபதே நாட்களில், இருப தாயிரம் பேர் உட்காருகிற அரங்கம், யக்ஞ சாலை, கார் பார்க்கிங், வேத விற்பன்னர்கள் தங்க வசதி என்று ஹைடெக்காக மாற்றியிருக்கிறார்கள்.

★ 140 வேத விற்பன்னர்கள் மகா ராஷ்டிரா மற்றும் தென் மாநிலங்களி லிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டிருக் கின்றனர். தலைமை விற்பன்னரைத் தவிர மற்றவர்களுக்கு வயது முப்பத்தைந்துக் குக் கீழ்! எல்லோரும் மருத்துவப் பரி சோதனைக்குப் பிறகே ஓ.கே. செய் யப்பட்டிருக்கின்றனர்.



★ யக்ஞ குண்டத்தில் முதன்முதலாக அக்னி மூட்டுவதற்குக்கூட தீப்பெட்டி பயன்படுத்தப்படவில்லை. வன்னி மரக் கட்டைகளை உரசுவதன் மூலம் தீப் பொறி எழுப்பப்பட்டு அக்னி வளர்க்கப் பட்டிருக்கிறது. யக்ஞங்களில் ஆஹுதி யாகப் போடப்படும் பல பொருட்கள் தவிர்க்கப்பட்டன. சுத்த சைவமாக யக்ஞம் வளர்க்கப்பட்டது.

★ ருத்ரம், நமகம் மற்றும் சமகம் என்ற இரு முக்கியப் பிரிவுகளைக் கொண்டது. பதினான்காயிரத்து அறுநூற்று நாற்பத் தொன்று நமகங்களும், ஆயிரத்து முன் னூற்று முப்பத்தொன்று சமகங்களும் ருத்ரத்தில் உள்ளன. பதினொரு நாட்கள் தொடர்ந்து ருத்ரம் சொல்லி யக்ஞம் வளர்த்தால் அது அதிருத்ரம்.

★ ஒரு ருத்ரம் சொல்ல பதினோரு நிமிடங்கள். அது முடிந்தவுடன், மார் பிளில் செய்யப்பட்ட லிங்கத்துக்கு அபிஷேகம், பின்பு ஆரத்தி. வேத விற்பன்னர்கள் பனி சூழ்ந்த விடியலில் ருத்ரம் சொல்லும்போது, அந்த ஒலி அதிர்வுகள் கொடுக்கும் மன நிறைவை,



# மலரட்டும் மனிதநேயம்!

அமைதியை, அனுபவத்தின் மூலமே உணர முடியும்.

★ அரங்கத்துக்கு உள்ளே மட்டுமல்ல, வெளியேயும் சுமார் ஒரு கி.மீ. தூரத்துக்கு எங்கும் சாயி பக்தர்கள்தான். சாயி வாலண்டியர்களின் சுறுசுறுப்புக்கு ஈடு இணை ஏதுமில்லை. கூட்டத்தை ஒழுங்கு படுத்துவதிலிருந்து, பாத்திரங்களைச் சுத் தப்படுத்துவது, அரங்கத்தைப் பெருக்குவது, யக்ஞத்துக்குப் பொருட்களைச் சேர்ப்பது, பாதுகாப்பு என்று சகல பணிகளையும் செய்தனர். வாலண்டியர்களில் உயர் பதவி வகிப்பவர்களும் உண்டு. ஆனால் எல்லோருக்கும் ஒரே அந்தஸ்துதான். அது பாபா பக்தர் என்பதுதான்.

★ மங்களூர் அருகே இருக்கும் பெல்தங்காடி என்ற இடத்தைச் சேர்ந்த பிரபாகர் ராவ் என்பவர் பாக்கு மற்றும் தென்னை மரங்களைப் பயன்படுத்திச் செய்த அலங்காரங்கள் அசத்தல்! தின மும் புஷ்பங்கள் பெங்களூர் மற்றும் ஊட்டியிலிருந்து கொண்டு வரப்பட்டன.

★ தமிழ்நாட்டின் பல பகுதிகளி லிருந்து நடக்கக்கூட இயலாதவர்களும் பாபாவின் தரிசனத்துக் காக வந்திருந்தனர். அரங்க வாயிலிலிருந்து அவர்களைச் சக்கர நாற்காலியில் உள்ளே கொண்டு வந்து, பின்னர் நிகழ்ச்சிகள் முடிந்தவுடன், ஞாபகமாக திரும்பக் கூட்டிச் சென்றது நெகிழ வைத்தது.

★ பல வெளிநாடுகளிலிருந்து - குறிப் பாக வாடிகன் நகரிலிருந்துகூட பக்தர்கள் வந்திருந்தனர். "அவரது அற்புதங்களைக் காணும் பெரும் பாக்கியம் பெற்றவன் நான்" என்றார் கொழும்பிலிருந்து வந் திருந்த ஆடிட்டர் கானமூர்த்தி. காலை யும் மாலையும் ஒரு மணி நேரம் பக்தர் களுக்குத் தரிசனம் தந்தார் பாபா.

★ "இந்த யக்ஞத்தை தொடர்ந்து செய்து வந்தால், உலக மக்களிடம் ஒற்றுமை வளர்ந்தோங்கும். ஒற்றுமை புனிதத்தைக் கொடுக்கும். புனிதம், தெய்வீகத்தை உண்டாக்கும். எல்லோரும் சகோதர, சகோதரிகளாக வாழ்வோம். மலரட்டும் மனிதநேயம்!" - இது பாபா வின் வார்த்தைகள்.

தொகுப்பு : ஸ்ரீநி




* கஸ்டமருடன் 'மில்கி வே' உரிமையாளர் கணேஷ் குழந்தை... (இடது)

**செல்ஃபோன் உபயோகிக்காத மனிதர்களை விரல்விட்டு எண்ணி விடலாம். ஆனால் அவற்றால் ஏற்படும் பாதிப்புகள் அதிகம் என்று புலம்பு வோரும் இல்லாமல் இல்லை. இது குறித்து அறிய, பல்லாண்டுகளாக சென்னை தி.நகரில் 'மில்கி வே செல் டெக்' என்னும் செல்ஃபோன் நிறு வனத்தை நடத்தி வரும் கணேஷ் குழந்தையை அணுகினோம்.**

"ஒரு நாளைக்குத் தொடர்ந்து மூணு மணி நேரம், நாலு மணி நேரம்னு செல்ஃபோன்ல பேசியிருக்கேன். இது வரைக்கும் எந்த ஒரு பாதிப்பும் வந்ததில்ல. அப்படி வருமான்னு என் ஃபேமிலி டாக்டர் கிட்டக்கூட கேட்டேன். அப்படி எதுவும் இல்லைன்னுதான் சொன்னாரு. ஆனால் 'சில்வர் கோட்டிங்' கொடுக்கப் பட்டுள்ள செல்களில் தொடர்ந்து பேசிக் கிட்டே இருந்தால் சூடாகி, அந்தச் சூடு காதுல பட்டா டென்ஷன், தலைவலின்னு வருமாம். அதுகூட, மூளையைப் பாதிக்கிற அளவுக்கெல்லாம் போக வாய்ப்பில்லை. அதே மாதிரி செல்ஃபோன் சார்ஜில் இருக்கும்போது பேசினால் வெடிக்கும் என்பதெல்லாம் சும்மா" என்றார்.

**சரி, செல்ஃபோனை எப்படிப் பாதுகாப்பா வச்சுக்கறது?**

"முதலில் அதைக் கீழே விழாமல் பார்த்துக்கணும். அப்புறம் ஒரு சொட்டுத் தண்ணீர் உள்ளே போனாலும் உங்க மொபைல் 'அம்போ'தான். தண்ணீர் உள்ளே போயிடுச்சுன்னு தெரிஞ்சதுமே பேட்டரியைக் கழற்றிவிடுவது உத்தமம். அப்படி பேட்டரியைக் கழற்றாமல் சர்வீஸுக்குக் கொண்டு வந்தால், மொபைலைக் கண்டுபிடித்தவரே வந்தால்கூட அதைச் சரிசெய்ய முடியாது. சிலர் தண்ணீர் புகுந்த மொபைலை வெயில், ஃபேன், ஹேர் ட்ரையரால் உலர வைப்பார்கள். அது தவறு. காரணம், சர்வீஸ் சென்டரில்தான் ஒரு குறிப்பிட்ட திரவத்தைக் கொண்டு சுத்தம் செய்வார்கள்."

**பேட்டரியின் ஆயுளை அதிகரிப்பது எப்படி?**

"சார்ஜ் முழுவதும் குறைந்த பிறகுதான் மீண்டும் சார்ஜ் செய்ய வேண்டும். அடிக்கடி சார்ஜ் போட்டால் பேட்டரியின் 'மெமரி எஃபெக்ட்' தன் நிலையையே



● சர்வீஸ் பிரிவு...

மொபைலில் இந்த சாஃப்ட்வேர் இன்ஸ்டால் செய்யப்படும். ஒரு வேளை நம்முடைய மொபைலை யாராவது திருடி, வேறொரு சிம் கார்டை போட்டுப் பயன்படுத்தினால், உடனே அந்த நபரின் மொபைல் எண், நமது நண்பருடைய மொபைலுக்குத் தகவலாக வந்துவிடும். அதை வைத்துத் திருட்டுபோன மொபைலைக் கண்டுபிடித்து விடலாம்'' என்று கூறும் கணேஷ் குழந்தை, கடந்த ஆறு வருடங்களாக மொபைல் சர்வீஸ் செய்ய ஆரம்பித்து, தற்போது விற்பனையும் செய்து வருகிறார்.

"சிறந்த சர்வீஸும் நம்பிக்கையும்தான் எங்களுடைய வெற்றிக்குக் காரணம். ஈ.சி.ஆர். ரோட்டில் ஹெல்ப் லைன் தொலைபேசி இருப்பதைப் பார்த்திருப்பீர்கள். அந்தச் சாலையில் போகும்போது எந்தப் பிரச்னை ஏற்பட்டாலும் பக்கத்தில் உள்ள டோல் பிளாசாவுக்குத் தகவல் அளிக்கலாம். அப்படிப்பட்ட வசதியைக் கடந்த ஐந்து வருடங்களாக நாங்கள்தான் செய்து வருகிறோம்" என்கிறார் கணேஷ் குழந்தை.

மறந்துவிடும். இதனால் இரண்டு, மூன்று மாதங்களுக்குப் பிறகு நாம் எதிர்பார்க்கிற அளவுக்கு சார்ஜ் நிற்காது'' என்றவர், செல்ஃபோன்களின் பயன்பாடுகள் குறித்தும் விளக்கினார்.

''ஒரு நாளைக்கு மிஞ்சிப்போனா

# செல்ஃபோனால் ஆபத்தா?

ரெண்டு பேரைத்தான் சந்திச்சுப் பேச முடியும். ஆனா இன்னைக்கு ஒரே இடத்துல உட்கார்ந்துக்கிட்டு இருநூறு பேர்கிட்ட பேசி நம்ம வேலையை முடிக்கிற அளவுக்கு மொபைல் போன்கள் நமக்கு உதவுது. மல்டி ஜி.பி.ஆர்.எஸ். மற்றும் எம்.எம்.எஸ். பயன்பாடு மூலமா நமக்கு இணைய தளத்துல வர்ற மெயில்களை செல்போனிலேயே அறிந்து கொள்ளலாம். இருபத்தைந்தாயிரத்துக்கும் மேல் உள்ள 'விண்டோஸ்' மொபைலை வாங்குபவர்களுக்கு Anti Theft வசதி செய்து தரப்படும். நமது நெருங்கிய நண்பரின்

**மில்கி வே செல் டெக்,**
ஏ-1, மதர் ஷெல்டர் அபார்ட்மெண்ட்ஸ்,
94, ஹபிபுல்லா ரோடு, தி.நகர்,
சென்னை-17. செல் : 9840766110-8.
தொலைபேசி : 28342020, 28342929
ஃபேக்ஸ் : 42121075
இமெயில் : milkyway.celltech@yahoo.com

**- வினோ**

படங்கள் : **பொள்ளாச்சி சுந்தரம்**

# ஜனங்களின் சாமி

'ஒரு காலத்துல அகப்ப நாட்டுல ரொம்பப் பஞ்சம் வந்ததால ஊரு சனம் பூராவும் பொழப்புக்காக வேற ஊரு களுக்குப் போனாக. அந்த ஊருல இருந்த மாடப்பத் தேவரும், அவரு பொண்டாட்டி மாடியும் தெக்க இருந்த அம்பாசமுத்திரத்துக்குப் பக்கத்துல இருந்த 'ஊய்க்காடு'ங்குற ஊருக்கு வந் தாக. மாடப்பத் தேவரு, ஆளு கட்டுமுட்டாவும் கடா மீசையுமா இருந்ததால ஜமீன்தாரு அவர ஊர்க் காவலுக்கு வைச்சாரு.

அந்த ஊருக்கு வந்த ராசியோ என் னமோ, ரொம்ப காலமா புள்ளையே இல்லாம இருந்த மாடி கர்ப்பமானா. அச்சு அசலா அப்படியே மாடப்பத் தேவரையே உரிச்ச மாதிரி ஒரு ஆம் புளப் புள்ளைய பெத்தா. புள்ளைய பூப்போலப் பொத்திப் பொத்தி வளர்த்து 'முத்தையா'ன்னு பேரு வைச்சா. புள்ளையும் வளர்ந்தான். வீர, சூரனான எளவட்டமானான்.



எளவட்டம் முத்தையா வும் அப்பாவோட காவ லுக்குப் போக ஆரம் பிச்சான். எளவட்டத் துக்குன்னே இருக்குற விசயம் என்ன? காதல் தானே! முத்தையாவும், அந்த ஊர்ல இருந்த வீராயியும் காதலிச்சாக. ரெண்டு பேரும் ஊர் ஒடுங்குன பொறவு, ஊருக்கு ஒதுக்குப்புறமா ஒரு மரத்தடியில அடிக் கடி சந்திச்சுப் பேசிப் பிறக்கி இருந்தாக. களவே இல்லாம இருந்த ஊர்ல 'திடீர்'னு வாழத் தோப்புல வாழத்தாருக களவு போக ஆரம்பிச் சுச்சு. இந்த சேதி ஜமீன்தாரு காது வரைக் கும் போக, அவரு மாடப் பத் தேவரக் கூப்பிட்டு, 'உம்ம காவல் காட்டுல எவனோ ஒரு கொம்பன் கை வரிசக் காட்டு தானே, நீரு என்ன பண்றீருன்'னு கோவமா கேட்டுட்டாரு.

மாடப்பத் தேவருக்கு மனசு சங்கடமாயிடுச்சு. 'அந்தக் கள்ளாளிப் பெயல எப்படியாவது பிடிச்சிரு தேன். எனக்கு நாலு

தெக்கத்திச் சிறு தெய்வங்களின் வரலாற்றுக் கதைகள்

4

# ஊழ்க்காட்டு முத்தையா

அரண்மன வீரங்களக் கொடுங்க'ன்னு தயவா கேட்டாரு. ஜமீன்தாரும் ஆளு அனுப்பினாரு.

முத்தையாவும், வீராவும் எப்பவும் சந்திக்குற எடத்துல பொழுது 'கருகரு'ன்னு மசங்குன நேரத்துல கூடுனாங்க. அப்ப அவ 'எனக்கு ஊடு பழம் சாப்பிடணும்னு ரொம்ப ஆசையா இருக்கு. நாளைக்குக் கருக்கல்ல என்னப் பாக்க வரும்போது கொண்டுக்கிட்டு வருவீகளா'ன்னு கேட்டா. 'நீ கேட்டா மலையையே தூக்கிட்டு வருவேன்; ஊடுபழம் பெருசா!'ன்னு வீரமாச் சொன்னான்.

முத்தையா காவக்காரனோட புள்ளைங்கிறதால எந்தத் தோட்டத்துக்கும் எப்ப வேணாலும் போயிட்டு வருவான். எந்தெந்தப் பனையில நொங்கு கெடக்கு, எந்தெந்தத் தென்னையில எளநி கெடக்குன்னு எல்லாமே அவனுக்கு அத்துப்படி. வீராயி 'ஊடு பழம்'னு சொன்ன நிமிஷத்துல கல்லுடையான் தோட்டத்துல, எட்டாவது பத்தியில, பன்னிரண்டாவது வரிசையில இருக்கிற வாழத்தாருல இருக்குங்குறது, அவன் ஞாபகத்துக்கு வந்துச்சு. உடனே மனசுக்குள்ளயே திட்டம் போட்டான். 'இன்னிக்கு ராத்திரிக்கு கல்லுடையான் தோட்டத்து ஊடு பழ வாழத்தார வெட்டிட்டு வந்து ஓடப் பொதர்ல ஒளிச்சு வச்சிரணும்'னு முடிவு பண்ணினான்.

அன்னிக்கு ஜமீன்தாரு, மாடப்பத் தேவரக் கூப்பிட்டு 'இன்னிக்கு ராத்திரி அந்தக் கள்ளாளிப் பயல் உம்ம கையில மாட்டினா மொதல்ல அவன் மோகத்த ஒரு குட்டிச் சாக்கு (கோணிப்பை) மூடிக் கட்டிரும். பொறவு, அவன ஊருக்குக் கெழக்க இருக்குற வெட்டுப் பாறைக்குக் கொண்டு போயி தலைய துண்டா வெட்டிரும். ராவோடு ராவா அவன் பொணத்த நாய் நரிக திங்கட்டும். இத செஞ்ச உடனே உனக்குப் பெரிய சன்மானம் இருக்கு'ன்னு சொல்லி அனுப்பி வைச்சாரு.

முத்தையாவுக்கோ தூக்கமே வரல. எப்படா ரெண்டாஞ்சாமம் வரும்னு கணக்குப் பண்ணிக்கிட்டே இருந்தான்.

ரெண்டாஞ்சாமம் வந்ததும், எந்திரிச்சு எரவாணத்துல சொருகியிருந்த வெட்டருவாளை எடுத்துக்கிட்டு தோட்டத்துக்குப் போனான்.

வாழத் தோட்டத்தச் சுத்தி ஆளு சரத்து உயிர்வேலி. தோட்டத்து ஈசான மூலையில் மட்டும் போக, வர ஒத்த வழிப்பாதை.

நல்ல கும்மிருட்டு! அந்த இருட்டுலயும் ஒருத்தன் வாசத் தட்டியத் தொறந்துட்டு கொஞ்சங்கூட பதட்டமே இல்லாம போறத மாடப்பத் தேவரும், கூட இருந்த வீரங்க ரெண்டு பேரும் பாத்துட்டாங்க. அந்த வீரங்க கிட்ட மாடப்பத் தேவரு, ''புள்ளிக்காரன் வசமா வந்து கன்னியில மாட்டிக்கிட்டான். குட்டிச் சாக்கையும்

கழனியூரன்



**ஊய்க்காட்டு முத்தையா**

அம்பாசமுத்திரம் வட்டத்தில் ஊய்க்காடு என்ற ஊரில் உள்ளது 'ஊய்க்காட்டு முத்தையா' சாமியின் கோயில்.

திருநெல்வேலி மாவட்டத்தின் பல பகுதிகளிலும் இப்பெயருடைய சாமி உள்ளது. வீரகேரளம் புதூர் அருகில் உள்ள 'ஊய்க்காட்டு முத்தையா' என்ற சாமியின் புகைப் படம் இது.

கயித்தையும் எடுத்துத் தயாரா வச்சுக்கிட்டு மெள்ள பூன மாதிரி நடந்து வாங்க. புள்ளிக்காரன் வாழத்தாரு வெட்டிட்டு இந்த வழியாத்தான் வருவான்'னு மெதுவாச் சொல்ல, ரெண்டு பேரும் 'சரி'ன்னு தலையை ஆட்டினாங்க.

அந்த மையிருட்டுலயும் முத்தையா ஊடு பழத்தக் கண்டுபிடிச்சு, அமுக்கிப் பாத்து, அது ஊடு பழந்தான்னு சரியா யூகிச்சு அருவாள ஓங்கி வாழத்தாரு தண்டுல ஒரு வெட்டு வெட்டினான். அவன் வெட்டுன சத்தத்தைக் கேட்ட மாடப்பத் தேவரும் வீரங்களும் உசாரானாங்க.

வாழத்தாரு ஒராளு சொமை இருந்துச்சு. ஆனா, முத்தையா வாழத்தார அனாயசமா ஒரு கையால தூக்கித் தோள் மேல போட்டுக்கிட்டு வந்தான். இவுக திட்டம் போட்டபடி சாக்குப்பையை அவன் மேலப் போட்டுக் கவுத்திட்டாக! முத்தையா வால சத்தம்கூட போட முடியல. முத்தையாவ குண்டுக்கட்டாக் கெட்டி, அப்பிடியே வெட்டிப் பாறைக்குத் தூக்கிட்டுப் போயிட்டாக.

அங்க போனதும் வீரங்க மாடப்பத் தேவர்கிட்ட 'உங்கள ஜமீன்தாரு இந்தக் கள்ளாளிப் பயலோட தலைய வெட்டச் சொன்னாரே'ன்னு சொன்னாங்க. உடனே இவரும் வெகுமதிக்கு ஆசப்பட்டு ஒரே வெட்டா வெட்டிட்டார். முத்தையாவோட தலை அப்படியே சுத்திட்டுப் போயி தனியா விழுந்துச்சு. பொறவு, மாடப்பத் தேவரு ரொம்பப் பெருமிதத்தோட வீட்டுக்குப் போயிட்டாரு. மறுநா, விடிஞ்சோனதான் தான் வெட்டினது தன்னோட புள்ளைங்குற உண்மையே தெரிஞ்சது. தான் தவமா தவமிருந்து பெத்த புள்ளையோட ஒடம்ப நாய் நரி திங்கறதப் பார்த்த மாடி, புருசன மனசு ஆறுற வரைக்கும் திட்டினா. மனசு ஆறுமா? துக்கம் தாங்காம, பாழுங்கெணத்துல விழுந்து செத்து மடிஞ்சா. 'பெத்த புள்ளையையே கொன்னுட்டமே, இனி உயிரோட இருக்கலாமா'ன்னு நெனச்ச மாடப்பத் தேவரும் புளிய மரத்துல தூக்குப் போட்டு நாண்டுக்கிட்டாரு.

'ஒரு குடும்பமே அழிஞ்சு போக நாமதான் காரணம்'னு வீராயியும் அரளி வெதைய அரச்சுக் குடிச்சிச் செத்துப் போனா.

'ஒரு வம்சமே அழிஞ்சு போக தானும் ஒரு காரணம்'னு நெனச்ச மகராசா ஊய்க்காட்டு மாடன் கோயில ஒட்டி, ஊய்க்காட்டு முத்தையாவோட சிதைஞ்ச சடலத்தையும், வெட்டுப்பட்ட தலையையும் அடக்கம் பண்ணி, அந்த இடத்துல ஒரு பூடத்தையும் கெட்டி வச்சார்'னு ஊய்க்காட்டு முத்தய்யா சாமியோட வரலாறச் சொன்னாரு செம்புலிப் பட்டணம் தங்கராசு.

(தொடரும்)

## திருக்கைலாய யாத்திரை

டில்லி வழி: 62,000/-
கோரக்பூர் வழி: 56,000/-
காத்மாண்டுவிலிருந்து: ரூ. 49,900/-
(2007ஆம் ஆண்டில் 21 முதல் 25வரை யாத்திரைகள்)

பிப்ரவரி 15க்குள் முன்பணம் செலுத்துவோருக்கு சிறப்புச் சலுகை உண்டு

## காசி யாத்திரை

சென்னை - காசி - கயா - அலகாபாத் - சென்னை
ரூ. 3,900/- 12.03.07; 09.04.07; 14.05.07

## சீரடி பாபா தரிசனம்

சென்னை - சீரடி - சனி சிங்கனாபூர் - நாசிக் - பஞ்சவடி - திரியம்பகம் - பூனா - சென்னை
ரூ. 2,800/- 23.03.07; 20.04.07; 18.05.07

## ராஜஸ்தான் சுற்றுலா

சென்னை - ஜெய்பூர் - பிகானீர் - தேஷ்னோக் - ஜெய்சால்மர் - ஜோத்பூர் - உதய்பூர் - மவுண்ட் அபு - அஜ்மீர் - புஷ்கர் - சென்னை
ரூ. 6,900/- 23.03.07

## அந்தமான் சுற்றுலா

ரூ. 5,000/- + டிக்கட் 03.02.07; 03.03.07; 07.04.07

## நைனிடால் சுற்றுலா

சென்னை - டில்லி - ஹரித்துவார் - முசோரி - நைனிடால் - ராணிகேட் - அல்மோரா - சென்னை
ரூ. 5,900/- + டிக்கட் 11.05.07

## முக்திநாத் தரிசனம்

சென்னை - கோரக்பூர் - போக்ரா - முக்திநாத் - காத்மாண்டு - நைமிசாரண்யா - அயோத்தியா - காசி - அலகாபாத் - சென்னை
ரூ. 15,900/- 02.03.07, 15.04.07, 18.05.07
(ஹெலிகாப்டர் பயணத்துடன்)

## டார்ஜிலிங் சுற்றுலா

சென்னை - பூரி - புவனேஷ்வர் - கொல்கத்தா - டார்ஜிலிங் - கேங்க்டாக் - சாங்கு ஏரி - நியு ஜல்பைகுரி - சென்னை
ரூ. 6,900/- + டிக்கட் 20.04.07, 29.04.07, 08.05.07, 17.05.07, 26.05.07

## காஷ்மீர் சுற்றுலா

சென்னை - டில்லி - அமிர்தசரஸ் - ஜம்மு வைஷ்ணவி - ஸ்ரீநகர் - குல்மார்க் - பஹல்காம் - டில்லி - சென்னை
ரூ. 7,900/- + டிக்கட் 06.05.07, 16.05.07

## சாரோதாம் யாத்திரை

சென்னை - டில்லி - ஜம்மு வைஷ்ணவி - ஹரித்துவார் - யமுனோத்ரி - கங்கோத்ரி - கௌமுக் - கேதார்நாத் - பத்ரிநாத் - ரிஷிகேஷ் - டில்லி - சென்னை
ரூ. 9,200/- 11.05.07

அனைத்து சுற்றுலாக்களுக்கும் அருமையான தங்கும் அறைகள், பஸ் வசதி, சைவ உணவு உட்பட (LTC வசதி உண்டு)

## வட இந்திய சுற்றுலா

ஏசி அறைகள் மற்றும் ஏசி பஸ் வசதியுடன்
சென்னை - ஆக்ரா - மதுரா - ஜெய்பூர் - டில்லி - ஜம்மு வைஷ்ணவி - அமிர்தசரஸ் - குலு - மனாலி - ஸ்னோ பாயின்ட் - மணிக்கரன் - சண்டிகர் - டில்லி - சென்னை
ரூ. 9,200/- + டிக்கட் 15 நாட்கள்
27.04.07, 08.05.07; 21.05.07

## குலுகுலு சுற்றுலா

ஏசி அறைகள் மற்றும் ஏசி பஸ் வசதியுடன்
சென்னை - குருக்ஷேத்திரம் - சண்டிகர் - குலு - மனாலி - ஸ்னோ பாயின்ட் - மணிக்கரன் - அமிர்தசரஸ் - டில்லி - சென்னை
ரூ. 7,200/- + டிக்கட் 12 நாட்கள்
22.04.07, 30.04.07, 08.05.07; 16.05.07, 24.05.07

**அரசு சுற்றுலாக் கழக பேருந்துகளில்**

ஏசி அறைகள் மற்றும் Non AC பஸ் வசதியுடன்
ரூ. 6,900/- + டிக்கட் 12 நாட்கள்

## ஸ்ரீ டிராவல்ஸ்

194/D, 2வது மாடி, அண்ணா சாலை, சென்னை-6.
போன்: 044 - 65345081; 082; 28516799;
www.sreetravels.net
sritrave@satyam.net.in

---



## வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.

அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி (Regd)
"ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகாஸ்தானம்"
29-30 கிழக்கு ஐய்யன் தெரு, கும்பகோணம் - 612 001.
E-mail : vedagdps@sancharnet.in - Website : www.geocities.com/gdpskmu

☎ Off : (0435) 5532239
Fax : 2425948
Patasala : 5532238, 2422866

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். ஒரு வேதக் குழந்தையின் படிப்பு பராமரிப்பு செலவை ஒரு குடும்பம் எடுத்துக்கொண்டால், பெரும்பலனாக இருக்கும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் மூதாதையர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 463 ஆண்டுகளாக நடந்துவரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை பேணி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 200 மாணவர்களுக்கு 17 வேத, சாஸ்திர அத்யாபகர்கள் புராதனமான குருகுல முறைப்படி ரிக் வேதம், கிருஷ்ண, சுக்ல யஜுர் வேதம், ஸாம வேதத்தை போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்குகொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம். புதிய பாடசாலை கட்டிடம் ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகா ஸ்தானம் என பெயரிடப்பட்டு 21-6-2004 திங்கள்கிழமை ஸ்ரீ காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் திறந்து வைத்து வேத அபிவிருத்திக்கு அர்ப்பணித்தார்.

| தங்கள் நன்கொடைக்கு U/S 80-G பிரிவின்படி வருமான வரி விலக்கு உண்டு<br>நன்கொடை திட்ட விபரங்கள் | நன்கொடை தொகை | நிரந்தர வைப்பு நிதி "Corpus Fund" |
|---|---|---|
| ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி தொகை) | Rs. 500 | Rs. 8,000 |
| அமாவாஸ்யை (or) பௌர்ணமி (or) க்ருஷ்ண (or) சுக்ல பக்ஷ த்வாதசி ஒரு ஸமாராதனைக்கு [Please choose one specific day of a particular month in a year for Samaradhana] | Rs. 1,500 | Rs. 25,000 |
| வேதம் பயிலும் ஒரு மாணவனின் பராமரிப்பு ஒரு மாத செலவு ரூ.1000/- | Rs. 12,000 P.A | Rs. 2 Lakhs |

நன்கொடைக்கான தொகையை Cross செய்யப்பட்ட D.D/ Cheque-ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்பக் கோருகிறோம்.

# விழிப்புணர்வு

**சிறுநீரகத் திருட்டுதான் இன்றைக்கு தமிழ்நாட்டின் ஹாட் டாபிக். இதில் அரசியல் வேறு புகுந்துகொள்ள, நிலைமை சிக்கலாகியுள்ளது. சிறுநீரக தானம் குறித்துச் சட்டம் என்ன சொல்கிறது...? செயிண்ட் தாமஸ் மவுண்ட் மருத்துவமனையின் சிறுநீரகவியல் துறைத் தலைமை மருத்துவர் - ரவிச்சந்திரன் கூறுகிறார் :**

"முன்பெல்லாம் சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சை செய்துகொள்ளும் நோயாளி நேரடியாக மருத்துவரை அணுகுவார். சிறுநீரகத்தைத் தானமாக அளிக்க முன்வரும் நபரும் மருத்துவரை அணுகுவார். அவரிடமிருந்து சிறுநீரகத்தைத் தானமாகப் பெறுவதற்கு முன்னால், அவருக்கு ஆயுள் காப்பீடு ஒன்றை ஏற்படுத்தித் தருவோம். இதைத் தவிர ரூபாய் 60,000-க்கு வங்கி ஒன்றில் வைப்புத் தொகையும் மருத்துவமனையின் சார்பில் அளிப்போம் (இந்தப் பணம், தானம் பெறுபவரிடம் இருந்து பெறப்படும்). நோயாளி ஏழையாக இருக்கும் பட்சத்தில் அவருக்குத் தொண்டு நிறுவனங்கள் மூலம் பண உதவி ஏற்பாடு செய்து தருவோம். இந்த முறையில் அதிகமாகப் பிரச்னையும் இருக்கவில்லை.

1990களில் அமெரிக்கா உட்பட ஒரு சில மேற்கத்திய நாடுகள் 'ஒருவர் தனது உடல் உறுப்பை தானமாகத் தருவது தவறு, கண்டனத்துக்குரியது' என்று குரல் எழுப்பின. நமது இந்தியாவும் இதை ஏற்றுக்கொண்டு உடல் உறுப்பு மாற்று அறுவை சிகிச்சை சட்டம் - 1994 (Human Organ Transplantation Act 1994) என்ற புதிய சட்டத்தை இயற்றியது. இதற்குப் பிறகு நிறைய பிரச்னைகள் எழுந்துள்ளன.

இந்த 1994ம் ஆண்டின் சட்டப்படி சிறுநீரகத்தைத் தானமாக அளிக்க முன் வருபவர், எந்தவிதப் பணமும் பெறக்கூடாது. மேலும் சிறுநீரகத்தை தானமாகப் பெறுபவர், நோயாளியின் இரத்த சம்பந்தமான உறவினராகத்தான் இருக்க வேண்டும். இதற்கு அரசிடமிருந்து முறையான அனுமதியும் பெற வேண்டும்.

இந்த நிபந்தனைகளால் சிறுநீரக தானம் பெறுவது சிக்கலாகிப் போனது. உறவினர்களிடம் தானம் பெற முடியாத நோயாளி, வேறு வழியின்றி உறவினர் அல்லாத ஒருவரை உறவினர் என்று சொல்லி கிட்னி தானமாகப் பெற முயற்சி செய்வது வழக்கமாகியுள்ளது. இதற்காகப் பொய் சொல்லி அரசாங்கத்திடம் அனுமதியும் பெற முடிகிறது.


* டாக்டர் ரவிச்சந்திரன்

படம் : பொன்னாச்சி சுந்தரம்

# கிட்னி தானம்...

## சட்டம் என்ன சொல்கிறது?



"அமெரிக்காவைப் பார்த்து நாம் மாற, இன்று அமெரிக்காவே மாறிவிட்டது!"

இதனால் இந்த 'தானம்' என்பதே வியாபாரமாகி, கிட்னி தானம் செய்ய ஆட்களை ரெடி செய்து தரும் புரோக்கர்களும் உருவாகிவிட்டனர்.

இந்த நிலை மாற வேண்டுமென்றால் 1994 சட்டம் இயற்றுவதற்கு முன்பிருந்தபடி மருத்துவர், நோயாளி, தானம் அளிப்பவர் என்றிருந்த நேரடி தொடர்புமுறை உருவாக்கப்பட வேண்டும். சிறுநீரகத்தைத் தானமாக விற்கக் கூடாது என்ற சட்டத்தை மாற்றி, தானம் அளிப்பவருக்குப் பண உதவி அளிக்க வேண்டும். காரணம் சிறுநீரகத்தைத் தானம் அளிக்கும் ஒருவருக்குச் சிறிது காலம் மருத்துவ உதவி தேவைப்படும். இரத்த சம்பந்தமான உறவினர்களிடம் தான் நோயாளி சிறுநீரகத்தைப் பெற வேண்டும் என்பதை மாற்றி, தகுதியுள்ள எவரும் சிறுநீரகத்தைத் தானமாக அளிக்கலாம் எனச் சட்டத் திருத்தம் செய்யப்பட வேண்டும்.

இந்த 1994ஆம் ஆண்டு சட்டத்தை அமெரிக்காவைப் பார்த்து இயற்றினோம். ஆனால் இன்று அமெரிக்காவே சட்டத்தை மாற்றி சிறுநீரகத்தைப் பணத்துக்கு விற்கலாம் என்று கூறுகிறது!

ஈரான் நாட்டில் யாரெல்லாம் சிறுநீரகத்தைத் தானம் அளிக்க விரும்புகிறார்களோ, அவர்கள் அரசாங்கத்தில் தமது பெயரைப் பதிவு செய்துகொள்ளலாம். நோயாளிகள் நேரடியாக அரசை அணுகி, மருத்துவர்கள் மூலம் சிறுநீரகத்தைப் பொருத்திக் கொள்கிறார்கள். இடைத்தரகு, ஏமாற்றுக்கு இடம் தராத இதுபோன்ற திட்டத்தை நமது நாட்டிலும் ஏற்படுத்தலாம்.

சிறுநீரகத்தைத் தானமாக அளிப்பது எந்த விதத்திலும் தவறு இல்லை. ஒரு சிறுநீரகமே வாழ்நாள் முழுவதற்கும் போதுமானது என்ற எண்ணம் மக்களிடையே உருவாக வேண்டும். மறைந்த இருதய நிபுணர் டாக்டர் டி.ஜே.செரியன் மற்றும் தேவிகா மருத்துவமனையின் மருத்துவர் சலீம் தாமஸ் போன்றவர்கள் ஒரு சிறுநீரகத்தைத் தானமாக அளித்தவர்களே!

எய்ட்ஸ், காசநோய் மற்றும் புற்றுநோய் போன்ற ஆட்கொல்லி நோய்களுக்குச் செய்யப்படும் விழிப்புணர்வுப் பிரசாரங்களும், பண உதவியும் சிறுநீரகச் செயலிழப்பு நோய்க்கும் அளிக்கப்பட வேண்டும்."

- ராகவ்குமார்



# கல்கி



2006 பிப்ரவரி 4
விய தை 21
மலர் : 65
இதழ் : 27

தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா
- பாரதியார்

## பாபா உணர்த்தும் பாடம்!

"எந்த மதத்தையும் வெறுக்காதீர்கள்; எந்த மனிதன் மீதும் வெறுப்பு காட்டாதீர்கள்" - பகவான் ஸ்ரீ சத்ய சாயி பாபா இவ்வாறு பேசியது நமது அரசியல்வாதிகளின் கவனத்துக்கே முக்கியமாக உரியது. மதங்களை அரசியலாக்குவதும் தனிநபர் தூற்றுதலும்தான் இன்று தேர்தல் வெற்றிக்கான குறுக்குவழிப் பாதைகளாகத் திகழ்கின்றன.

பாபா தமது அறிவுரையைப் பேச்சளவில் நிறுத்திக்கொள்ளாமல் செயல்வடிவிலும் நிகழ்த்திக்காட்டி முன்னுதாரணமாக ஒளிர்கிறார் என்பதையும் நாம் வணக்கத்துடன் கவனிக்க வேண்டியிருக்கிறது.

பாபா எந்த மதத்தையும் வெறுக்கவில்லை, ஒதுக்கவில்லை என்பதோடு நாத்திகவாதத்தைக்கூட தாம் வெறுக்கவில்லை என்பதை, தமது சமீப சென்னை விஜயத்தின்போது முதல்வர் மு.கருணாநிதியின் இல்லத்துக்குச் சென்று அவரைச் சந்தித்ததன் மூலம் நிரூபித்திருக்கிறார். நாம் என்றும் மறவாமல் நினைவில் கொள்ள வேண்டிய நிகழ்வு இது.

கடவுள் மறுப்பைக் கொள்கையாகவே பரப்பி வருபவர் கருணாநிதி. பாபா உள்பட பல ஆன்மிகவாதிகளைத் தாக்கிப் பேசத் தயங்காதவர்; தி.மு.க.வினர் திருநீறு அணிவதையும் குங்குமம் தரிப்பதையும் கூடச் சகியாதவர். அத்தகையவரை நாடிச் சென்று நேசம் பாராட்டும் சத்ய சாயி பாபாவின் செயலை, சகிப்புத் தன்மையின் அடையாளம் என்றோ, பெருந்தன்மையின் வெளிப்பாடு என்றோ சொல்வது கூட குறைத்து மதிப்பிடுவதாகிவிடும். நிபந்தனைகளற்ற மனிதநேயத்தின் அடையாளமே









அந்தச் சந்திப்பு. அதன் மூலம் இந்தியாவெங்கிலும் உள்ள குறுகிய மனம் படைத்த அரசியல்வாதிகளுக்கும் அவர்களுடைய பாதிப்பினால் பிளவுபட்டுக் கிடக்கும் மக்களுக்கும் உன்னத செய்தியை வெளிப்படுத்தியிருக்கிறார் பாபா.

இந்தச் சந்திப்பினூடே ஸ்ரீ சத்ய சாயி பாபா, முதல்வரின் நம்பிக்கைகளைக் கேள்விக்குட்படுத்தவுமில்லை; தமது பாதையே மேன்மையானது என்று உயர்த்திப் பேசவுமில்லை; நிகழ்ந்த சந்திப்பின் முக்கியத்துவத்தைப் பற்றி எதுவும் குறிப்பிடவுமில்லை. வேறு பலருக்குச் செய்ததைப் போல், பகுத்தறிவு வாதத்துக்குக் கட்டுண்ட துரைமுருகனுக்கும் தயாநிதி மாறனுக்கும் மோதிரங்களை வரவழைத்துக் கொடுத்துள்ளார். அவர்களும் அதனை மகிழ்வோடு ஒப்புக் கொண்டுள்ளனர்.

தமிழக முதல்வரோ, தாம் ஸ்ரீ சத்ய சாயி பாபாவுக்குக் குறைந்தவரல்லர் என்று உணர்த்த விரும்பி, பல விதங்களிலும் பேசியிருக்கிறார்:

காவிரியும் கொள்ளிடமும் இணைவதைப் போல் தாங்கள் இணைந்திருப்பதாகச் சொல்லியிருக்கிறார். தமது அரசின் இலவசத் திட்டங்களை, பாபாவின் சமுதாய சமூகப் பணிகளுடன் ஒப்பிட்டுப் பேசியிருக்கிறார். அடுத்தபடியாக, கூவம் சுத்தி கரிப்புக்கு பாபா உதவ வேண்டும் என்று கோரிக்கையையும் வைத்திருக்கிறார்!

முன்னொரு காலத்தில் அரசியலும் ஆன்மிகமும் கொள்ளிடம் - காவிரி போல் இருந்திருக்கலாம். இன்று நிச்சயம் அப்படி இல்லை. வேறு உதாரணம்தான் தேட வேண்டியிருக்கிறது. அரசின் பொறுப்புகளையெல்லாம் நிறைவேற்றுவது சேவை அமைப்புகளின் வேலை அல்ல. சமுதாய மேம்பாட்டுக்கான நிரந்தரப் பணிகள் (குடி நீர்த் திட்டங்கள், கல்விக் கூடங்கள், மருத்துவ வசதிகள் போன்றவை), அரசாங்கத்தின் இலவச வினியோகத்தைப் போல் மக்களைச் சோம்பேறிப் பிச்சைக்காரர்களாக்கு வதில்லை.

கருணாநிதியைச் சந்தித்துத் திரும்பிய கையோடு, மனிதகுல மேம்பாட்டுக்காக மாபெரும் வேள்வி ஒன்றை சென்னையில் நடத்துகிறார் பாபா. மத நம்பிக்கைகளையும் வழிபாட்டு முறைகளையும் சிறுமைப்படுத்தும் போக்கு, இனியேனும் தமிழகத்தை விட்டுத் தொலையுமானால், பாபா உணர்த்திய பாடம் முதல்வருக்கும் இதர அரசியல்வாதிகளுக்கும் புரிந்தது என நாம் மகிழலாம். ○

# வாரம் ஒரு பாசுரம்!

ஆழ்வார் பாசுரங்களை ரசிக்க முதலில் பதம் பிரித்துக் கொள்ள வேண்டும். அது சில சமயம் எளிதாக இருக்கும்; சில சமயம் ரொம்பக் கடினமாக இருக்கும். தொண்டரடிப்பொடி ஆழ்வாரின் பாசுரங்கள் எளிமை ரகத்தைச் சேர்ந்தவை. நம்மாழ்வாரின் பாசுரங்களும் அப்படியே. அவரது, திருவிருத்தம் மட்டும் படுத்தும். உதாரணத்துக்கு இந்த 31ஆவது பாசுரத்தைப் பாருங்கள்.

இசைமின்கடுதென்றிசைத்தாலி
சையிலமென்றலைமே
லசைமின்களென்றாலசையுங்
கொலாமம் பொன்மாமணிக
டிசைமின்மிளிருந்திருவேங்கடத்து
வன்றாட்சிமய
மிசைமின்மிளிரியபோவான்வழிக்
கொண்டமேகங்களே

# திருப்பதிக்குச் செல்லும் மேகங்கள்!



தலை, கால் புரியவில்லை அல்லவா? இதில் ஒளிந்து கொண்டிருக்கும் பாடல் என்ன என்று பார்க்கலாம். முதலில் பதம் பிரித்தால் கொஞ்சம் வெளிச்சம் கிடைக்கும்.

இசைமின்கள் தூது என்று இசைத்

தால் இசையிலம் என் தலைமேல்
அசைமின்கள் என்றால் அசையும்
கொலோ அம்பொன் மாமணிகள்
திசைமின்மிளிரும் திருவேங்கடத்து
வன்தாள் சிமயம்
மிசை மின் மிளிரிய போவான்
வழிகொண்ட மேகங்களே
(வன்தாள் சிமயம் - வலிமையான அடி வாரமுள்ள சிகரம்)

இப்படிப் பிரித்தால் இன்னும் கொஞ்சம் தெளிவாகிறது. இந்தப் பாடலில், தலைவி திருவேங்கட மலைக்குச் செல்லும் மேகங்களைத் தூது போகச் சொல்கிறாள். அவை 'போ போ; அதற்கெல்லாம் எனக்கு நேரமில்லை' என்று மறுத்துவிட, 'என் தலையையாவது மிதித்துவிட்டுச் செல்லுங்கள்' என்கிறாள்.

இப்படி ஓர் அழகான ரத்தினத்தைப் பதம் பிரித்துத் தோண்டியெடுக்க வேண்டும்.

தமிழை ஒரு agglutinative language என்பார்கள். வார்த்தைகளை ஒட்ட வைத்துக் கொண்டே போகலாம். 'இசை மின் கடுது' என்பதை 'இசை மின்கள் தூது' என்றும், 'மணிகடிசைமின் மிளிரு' - மணிகள் திசை மின் மிளிரும் என்றும் வெளியே கொண்டு வந்தால் கிடைப்பது ஓர் அற்புதமான அகத் துறைப் பாடல். எப்பொழுதும் கைம்மாறு கருதாமல் பிறருக்கு உதவுதலையே இயல்பாக உடைய மேகங்கள் நம் காரியம் செய்யத்தக்கன என்று தலைவி நினைத்து வேங்கட மலைச் சிகரத்தில் மின்னலடிக்கச் செல்லும் மேகங்களிடம் 'என்னைப் பற்றிப் பெருமானிடம் சொல்லுங்கள் என்று கேட்டதில் தூது சொல்ல அவை இசைய (சம்மதிக்க)வில்லை. அதனால் 'என் தலைமேல் உங்கள் பாதத்தை வைத்து விட்டாவது செல்லுங்கள்' என்று கேட்கிறாள்.

இந்த நாட்களில் திருப்பதிக்குச் செல்லும் மேகங்களை நாம் லட்டு வாங்கி வர மட்டுமே சொல்வோம்.

16
சுஜாதா

(படிக்கலாம்)

# புத்தகம்

**திருகோகர்ணம் தலப்பெருமை, சுப்ர.பாலன், வானதி பதிப்பகம், 23, தீனதயாளு தெரு, சென்னை - 17, விலை ரூ.35**

புதுக்கோட்டை திருகோகர்ணேசுவரர் ஆலயத்தின் சிறப்பு, வரலாறு, தெய்வீகம், கலையழகு என அனைத்து அம்சங்களையும் நுணுக்கமாக ஆராய்ந்து எழுதப்பட்ட நூல் என்பதால் புதுக்கோட்டையின் வரலாறும் இதில் விரவிக் காணப்படுகிறது. சொந்த ஊரைப் பற்றிப் பெருமிதத்துடன் கூறும் தொனி நூல் முழுதும் மிளிர்கிறது.




**நான் கண்ட எழுத்தாளர்கள், ஜெமினி கேண்டீன் ஏ.என்.எஸ்.மணியன், நிவேதிதா புத்தக பூங்கா, 14, பீட்டர்ஸ் ரோடு, இராயப்பேட்டை, சென்னை - 14. விலை ரூ.50/-**

புத்தகங்களையும், பத்திரிகைகளையும் ஆர்வத்தோடு படித்து மகிழ்கிற வாசகர்கள் பலருக்கும் இயல்பாகவே ஓர் ஆசை இருக்கும். அது, அந்த எழுத்தாளர்களைச் சந்திக்க வேண்டும் என்பது. அப்படி 'தாம்' சந்தித்த எழுத்தாளர்களுடன் ஏற்பட்ட அனுபவத்தை, சுவையுடன் விருந்தாக்கி உள்ளார் ஜெமினி கேண்டீன் ஏ.என்.எஸ்.மணியன். அஜீரணத்தை ஏற்படுத்தாத விருந்து!

**உங்கள் தேர்வு பயங்களை உதறித் தள்ளுங்கள் - ஜி.முரளிதரன், சி.பி.எச். பப்ளிஷர்ஸ், 20, விஜயலக்ஷ்மி தெரு, மகாலிங்கபுரம், நுங்கம்பாக்கம், சென்னை - 34. விலை ரூ.49.**

முன்பெல்லாம் இயல்பாக நடந்த தேர்வுகள் இப்போது ஏதோ வாழ்க்கையின் கடைசி நிமிடங்களைப் போலப் பெரிதாக்கப்பட்டு பயமுறுத்துகின்றன. இதைப் போன்ற பயத்தை விரட்டி எப்படிப் படித்தால் வெற்றி பெறலாம் என்பதை உளவியல் அணுகுமுறையுடன் சொல்லும் புத்தகம்.

**மகிழ்ச்சியான குடும்பம் - ஷேக் முஹம்மத் காரக்குன்னு - இஸ்லாமிய நிறுவனம் ட்ரஸ்ட் - 138, பெரம்பூர் நெடுஞ்சாலை, சென்னை - 12. விலை ரூ.40**

குடும்ப உறவுகளிடையே ஏற்படும் ஈகோ, கருத்து மோதல் போன்றவற்றை எப்படி அணுகி, பிளவு ஏற்படாத வகையில் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்பதைச் சொல்லும் கட்டுரைத் தொகுப்பு. மலையாள நூலின் மொழிபெயர்ப்பு.

- அத்தியாயன்



# திருத்தியமைக்கப்பட்ட தேசிய காசநோய் தடுப்புத் திட்டம், தமிழ்நாடு




காச நோய்க்கான அறிகுறிகள் :



3 வாரங்களுக்கு மேல் தொடர்ந்து இருமல்



மாலை நேரக் காய்ச்சல்



எடை குறைதல்



பசியின்மை



நெஞ்சு வலி



நேரடி குறுகிய கால சிகிச்சை (DOTS) முறை :
காச நோயைக் குணப்படுத்த சிறந்த வழி
(காச நோயைக் கட்டுப்படுத்தும் தேசியத் திட்டம்).

- இந்தியாவில் மூன்று நிமிடங்களில் இரு காசநோயாளிகள் மரணமடைகிறார்கள்.
- மற்ற நோய்களால் இறப்பவர்களின் எண்ணிக்கையை விட, காசநோயால் இறப்பவர்களின் எண்ணிக்கை அதிகம்.
- வருடத்திற்கு சுமார் 18 இலட்சம் மக்கள் காசநோயால் பாதிக்கப்படுகின்றனர். அதில், சுமார் 8 இலட்சம் மக்கள், சளியில் கிருமியுடன் டி.பி. நோயை பரப்பும் தன்மையுடையவர்களாக உள்ளனர்.
- கண்டுபிடிக்கப்பட்ட ஒரு காசநோயாளி முறையான சிகிச்சை எடுத்துக்கொள்ளாவிட்டால், அவர் மூலம் புதிதாக 10 லிருந்து 15 காசநோயாளிகள் உருவாகும் அபாயம் உள்ளது.
- காசநோய்க்கு எல்லா அரசு ஆரம்ப சுகாதார நிலையங்களிலும், துணை சுகாதார நிலையங்களிலும், அரசு மருத்துவமனைகளிலும், பரிசோதனையும், உலக தரம் வாய்ந்த மருந்துகளும் இலவசமாக வழங்கப்படுகிறது.
- காசநோயாளி, மருத்துவர், டாட்ஸ் பொறுப்பாளர் ஆகியோரின் கூட்டு முயற்சியால் காசநோயற்ற சமுதாயத்தை உருவாக்கலாம்.

**காசநோயற்ற சமுதாயத்தை நோக்கி வீறு நடை போட உதவுங்கள்!**

பொது நலன் கருதி வெளியிடுவோர்:

மாநில காசநோய் தடுப்புச் சங்கம், சென்னை-600 006.

Visit us at: www.tn.gov.in / www.southindia.com

செமதொ/1557/வரைகலை/2006

# சந்திப்பு

'புதுப்பேட்டை'க்குப் பிறகு கொஞ்சம் தொய்வடைந்து போயிருந்த ஸ்நேகா, மறுபடி பிசியாகிவிட்டார். கைவசம் பல படங்கள்.



# "தனித்தன்மையை நிரூபிப்பேன்!"

"என் அளவுக்கு கான்ட்ரவர்ஸியில் சிக்கினவங்க யாரும் இருக்கமாட்டாங்க. ஆனா, இன்னிக்கு நிம்மதியா இருக்கேன். நான் ஒரு ஃபீனிக்ஸ் பறவை. போராட்டங்களிலிருந்து என்னால உயிர்த்தெழ முடியும்." - புதிய பறவையாகப் பேசியவர் தொடர்ந்து ஒரே மாதிரியாக நடிப்பது குறித்தும் சொன்னார்.

"எந்தப் படத்திலேயும் கெட்டப் மாத்தி நடிச்சதில்லைங்கிறது உண்மை தான். ஆனா எந்தப் படத்தோட போட்டோவைப் பார்த்தாலும் அது என்ன படம்னு கண்டுபிடிச்சுடலாம். முகத்திலேயே எக்ஸ்ப்ரெஷன் காட்டியிருப்பேன். புதுசா ஒரு கேரக்டரைச் செய்யும்போதே என் மனசுக்குள்ள உற்சாகம் வந்துடும். அப்படி போன வருஷம் எனக்கு உற்சாகமா அமைஞ்சது புதுப்பேட்டை.

தெலுங்கில நாகார்ஜுனாவோட 'ஸ்ரீராமதாஸ்' தேசிய விருதுக்குப் போகும்னு நினைக்கிறேன். சௌகார் ஜானகி மேடம் அந்தப் படத்தைப் பார்த்துட்டு வீட்டுக்குக் கூப்பிட்டுப் பாராட்டினாங்க. தங்கர்பச்சான் சாரோட 'பள்ளிக்கூடம்' படம் பார்த்துட்டு ஸ்நேகாவான்னு ஆச்சர்யப்படுவீங்க. என்னோட கதாபாத்திரங்களில் இது ஒரு மைல் கல்லா அமையும்" என்று உணர்ச்சிவசப்பட்டவரிடம் 'ஏன் இரண்டு ஹீரோயின் சப்ஜெக்ட்டுகளில் அதிகம் நடிக்கிறீர்கள்?' என்றோம்.

"பாலிவுட்ல அஞ்சாறு ஹீரோஸ், நாலஞ்சு ஹீரோயின்ஸ்னு படம் பிச்சுக்கிட்டுப் போகுது. தமிழிலும் அப்படி வரணும். அப்படிப்பட்ட படங்களிலும் தனித்தன்மையை நிரூபிப்பா இந்த ஸ்நேகா" - இல்லாத காலரைத் தூக்கிவிட்டுக் கொள்கிறார்.

**- விக்டர் மனோ**

# பாலிடிக்ஸ் பஜார்

• ம.தி.மு.க.வின் விரிசலுக்குத் தி.மு.க. தான் காரணம் என்று அதன் பிரமுகர்கள் சொல்வது ஒரு பக்கம் இருக்க, 'இதில் வேறு ஒரு கோணமும் இருக்கிறது' என்கிறார் போயஸ் தோட்டத்துடன் முன்பு நெருக்கமாக இருந்த அ.தி.மு.க. பிரமுகர். ''ஜெயலலிதாவோடு அரசியல் ரீதியாக வைகோ நெருங்குவது சசிகலாவுக்குப் பிடிக்கவில்லை. தனக்கும் தன் குடும்பத்தாரின் செல்வாக்குக்கும் ஆபத்து வந்து விடப் போகிறதே என்ற கவலை அவருக்கு. எனவே தான் தனது உறவினரான எல்.கணேசன் மூலம் ம.தி.மு.க.வில் பிளவை உண்டாக்கி விட்டார். வைகோ பலவீனப்பட்டால் அவரை ஜெ.வும் ஒதுக்கி விடுவாரே'' - இதுதான் அவர் சொல்லும் 'அடேங்கப்பா' கோணம்! மேலும் எம்.நடராஜனைக் கலந்தாலோசிக்காமல் எதுவும் செய்ய மாட்டாராம் எல். கணேசன்.


• சசிகலா


• எல்.கணேசன்

# விடாது பா.ம.க.!

• 'தொடர்ந்து ஆக்கபூர்வமான எதிர்கட்சியாகச் செயல்படுவோம்' என்று சொல்லியிருக்கும் மருத்துவர் ராமதாஸ், தி.மு.க. கூட்டணியை விட்டு அடுத்த ஆறு மாத காலத்துக்கு விலக மாட்டாராம். 'மக்கள் தொலைக்காட்சி' மற்றும் 'தமிழ் ஓசை' தினசரியை ஸ்திரப்படுத்துவதுதான் காரணமாம். ''இந்தச் சமயத்தில் ஏதாவது வில்லங்கம் செய்தால் செய்தித்தாளுக்குக் கிடைக்கும் அரசு விளம்பரங்கள் 'கட்'டாவது மட்டுமல்லாமல், சுமங்கலி கேபிள் விஷன், மக்கள் தொலைக்காட்சியை சேனல் வரிசையில் கடைசிக்குத் தள்ளி விடுமே'' என்கிறார் ஒரு தி.மு.க. பிரமுகர்.

• சென்னை அடையாறில் திருவிதாங்கூர் ராஜ குடும்பத்துக்குச் சொந்தமான பங்களாவும், அதைச் சுற்றி கோடிக்கணக்கான மதிப்பில் நிலமும் இருக்கின்றன. காலி நிலம் விற்பனை தொடர்பாக வழக்கு ஒன்று நிலுவையில் இருக்க, இதில் ஏற்படும் தாமதத்தைப் பயன்படுத்திக்கொண்டு, நிலத்தைப் பறிக்கும் வேலையில் ஒரு கும்பல் ஈடுபட்டிருப்பதாகச் சொல்கிறார்கள். மிக மிக செல்வாக்குமிக்க குடும்பத்துப் பெண்மணியின் ஆதரவு இந்தக் கும்பலுக்கு இருக்கிறதாம்!

- சஞ்சயன்

# அருள்வாக்கு

உத்தமமான விஷயத்திலே மனசைக் கொஞ்சமாவது நிறுத்தப் பார்க்காமல் ஓயாமல் காரியம் பண்ணிக்கொண்டே இருப்பதற்கு நாம் மனசு உள்ள மனுஷனாகப் பிறந்தேயிருக்க வேண்டாம்; ஒரு தொழிற்சாலையில் நம்மை ஏதாவது ஓர் இயந்திரமாகப் பண்ணிப் போட்டிருக்கலாம். என்றைக்கோ ஒரு நாள் தியானத்தில் பக்குவம் வரவேண்டுமென்றால் அதற்கு ஆரம்ப முயற்சி பண்ணாமல் எப்படி முடியும்? இனிமேலே பக்குவம் வரவேண்டுமென்பதாலேயே இப்போதுள்ள மனசோடுதான் ஆரம்பித்தாக வேண்டுமென்றாகிறது.

சோனியாயிருக்கிறவன் யோகாசனம் போட்டால் பலசாலியாகலாம். யோகாசனம் போடுவதற்கே சோனிக்குக் கஷ்டமாகத்தான் இருக்கும். அதற்காக அந்த முயற்சியை விட்டுவிடுவதா? அஞ்சு நிமிஷமாவது பண்ண ஆரம்பித்து, அப்புறம் பத்து நிமிஷம், கால்மணி, அரைமணி என்று பண்ணிக்கொண்டு போய் எத்தனையோ சோனிகள் ஆரோக்யசாலிகளானதைப் பார்க்கிறோம். அப்படித்தான் இதுவும்! ஆத்மா என்ற நினைப்பும் அத்வைதத்திலே பிரயாசையும் உங்களுக்கெல்லாம் இன்றிலிருந்தே கொஞ்சம் கொஞ்சமாவது இருக்கவேண்டுமென்று விரும்புகிறேன். இவை கொஞ்சம் இருக்கும்போதே இவற்றுக்கான சித்த சுத்தியைப் பெற நிறைய ஸத்கர்மா செய்யச் சொல்கிறேன். முடிந்த முடிவிலே நினைப்பும், அதாவது தியானமும் போய், ஞான அனுபவமே நிற்கும்.

## முயற்சியை விடலாமா?

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

# கவிதை

நீயும் நானும்
வார்த்தைகளால்
வாள் வீசிக்கொண்ட
அந்த நாளின் நள்ளிரவில்
யாரிடமும்
சொல்லிக் கொள்ளாமல்
ரகசியமாய்
துயரம் சுமந்தபடி
வெளியேறிப் போயிற்று
நம் பிரியமான நேற்று!

- க.அம்சப்ரியா

# பிரியமான நேற்று!



கொஞ்ச நாளாய்ப் பார்க்கிறேன்
விலகி ஓடிக்கொண்டேயிருக்கிறது
தனிமை

வானில் செல்லும் காகிதப் பட்டத்தின்
வானின் நிழலை
தரையில் கண்டு தூக்கும்
கதையாயிற்று

உறக்கம் தனிமை அல்ல
களைப்பு தரும் ஓய்வு தனிமை அல்ல
தனியாக இருப்பதும் தனிமை அல்ல
பாறை நுனியில் உருளா முட்டை
வானிலிருக்கும் பருந்துக்குத் தப்பி
அனுபவிக்க வேண்டிய ஒரு தனிமைக்கு
ஏங்குகிறதை கவனிக்கிறாயா...
சொல்லின் சமவெளி உனக்கு ஏதும்
சொல்லாது

சும்மாயிருப்பதும் தனிமை அல்ல
சும்மாவுக்குள் ஒரு சும்மா
இந்தத் தனிமை.

- பா.சத்தியமோகன்

# முதல்வன்

சின்ன வயதிலிருந்தே, பில் கேட்ஸை பிஸினஸ் உலகம் கவர்ந்திருந்தது. அதன் விளைவாக, அவர் பள்ளி மாணவனாக இருந்த காலகட்டத்திலேயே, பல்வேறு வணிகப் பத்திரிகைகள், புத்தகங்களை யெல்லாம் வாசித்து, பிஸினஸ் உலகைப் பற்றிய நுணுக்கமான பல விஷயங் களைப் புரிந்து கொண்டார்.

அவருக்குப் புதிய கேள்விகள், கனவு கள், ஆர்வங்கள் பிறந்தன. தனக்கென்று ஒரு நிறுவனம் ஆரம்பிக்க வேண்டும். வெற்றிகரமான தொழிலதிபராக வர வேண்டும் என்றெல்லாம் பெரிய ஆசை களை வளர்த்துக் கொண்டார்.

கேட்ஸின் பள்ளி நண்பர்களில் சில ருக்கும் அவரைப் போலவே தொழில் ஆர்வம் இருந்தது. அவர்களோடு 'பிஸி னஸ் விளையாட்டு'களை ஆரம்பித்தார் கேட்ஸ்.

நண்பர்கள் எல்லோரும் ஆளுக்கு ஒரு கம்பெனி ஆரம்பிக்க வேண்டும். அந்தக் கற்பனை நிறுவனத்தின் பெயர், சின் னம் என்ன தயாரிப்பது, அதை எந்த விதமாகச் சந்தையில் மார்க்கெட்டிங் செய்வது, எப்படி விற்பது - இப்படி எல்லா விஷயங்களையும் அவர்களே தீர்மானிக்க வேண்டும்.

இந்த ஆர்வம்தான், பில் கேட்ஸை யும், அவருடைய நண்பர்களையும் கம்ப்யூட்டர்களிடம் அழைத்துச் சென்றது. ஆனால், தெருவுக்கு ஒரு கம்ப்யூட்டர் சென்டர், மேஜைக்கு ஒரு பர்சனல் கம்ப்யூட்டரெல்லாம் அப்போது அறிமுகமாகி யிருக்கவில்லை.

ராட்சத உருவத்தில் இருந்த அந்தக் காலக் கணினிகள் ஒவ்வொன்றும் ஏகப் பட்ட விலை விற்றுக் கொண்டிருந்தன. இதனால், நம் ஊரில் சைக்கிள் வாட கைக்கு விடுவதுபோல, ஒற்றை கம்ப் யூட்டரை வைத்துக்கொண்டு மணிக் கணக்கில் அதை வாடகைக்குக் கொடுத் துப் பணம் சம்பாதித்தவர்கள் ஏராளம்.

நல்லவேளையாக பில் கேட்ஸுக்கு இந்தத் தொல்லைகள் எதுவும் இல்லை. அவரது லேக்சைட் பள்ளியிலேயே ஒரு கணினி இணைப்பு இருந்ததால், பில் கேட்ஸும் தோழர்களும் அதனை இலவசமாகவே பயன்படுத்திக்கொள்ள முடிந்தது.

ஆனால், அவர்களுக்குக் கம்ப்யூட்



## 4

என். சொக்கன்

டரைப் பற்றிச் சொல்லித் தருவதற்கு விஷயம் தெரிந்தவர்கள் யாரும் அங்கே இல்லை. ஆகவே புத்தகங்கள், கையேடு களைப் படிப்பது, எதையாவது அரை குறையாகத் தட்டிப் பார்ப்பது என்று அவர்களாவே தட்டுத் தடுமாறித்தான் பல விஷயங்களைப் பழகிக்கொள்ள வேண்டியிருந்தது.

இத்தனை சிரமங்களுக்கு நடுவிலும், கணினி என்கிற மாயாஜாலத்தின்


* லேக்சைட் பள்ளி...

# தில்லாலங்கடி யோசனை!

சாத்தியங்கள் கேட்ஸை வசீகரித்தன. தம்மைச் சுற்றியிருக்கிறவர்கள் எல் லோரும் மிகவும் மெதுவாகச் சிந்திக் கிறார்கள் என்று குறைபட்டுக் கொண்டிருந்தவருக்கு, மனி தனைவிட விரைவாகச் செயல் படக்கூடிய ஓர் இயந்திரம் என்கிற எண்ணமே பரவசம் தந்தது. ப்ரோக்ராம்கள் மூலம் அதற்குக் கட்டளையிட்டுத் தம் விருப்பப்படி செயல்படச் செய்யும் போது அவருக்குள் ராஜ பெருமிதம் பொங்கியது.

முதன்முதலாக பேஸிக் என்ற எளிய கணினி மொழியைக் கற்றுக் கொள்ளத் தொடங்கிய பில் கேட்ஸ், அதில் சின்னச் சின்னதாகச் சில ப்ரோக்ராம்கள் அமைத்துப் பழகினார்.

பில் கேட்ஸின் அதித ஆர்வத்துக்கு அவருடைய பள்ளி கம்ப்யூட்டர் நன்றாகவே தீனி போட்டது. ஆனால் கேட்ஸூம் நண்பர்களும் அதில் ஓரளவு திருப்திகரமாகப் பயிற்சி பெறுவதற்குள், பள்ளியின் இலவச கம்ப்யூட்டர் நேரம் முடிந்துவிட்டது. 'இனிமேல் கணினி யைப் பயன்படுத்த வேண்டுமானால், காசை எண்ணிக் கீழே வைக்க வேண் டும்' என்று கண்டிப்பாக அறிவித்து விட்டார்கள்.

இதைக் கொஞ்சமும் எதிர்பார்த்திருக் காத பில் கேட்ஸ் திகைத்துப் போய்விட் டார். லேக்சைட் பள்ளிக்கு கம்ப்யூட்டர் வந்ததிலிருந்து, பில் கேட்ஸ் வழக்கமான வகுப்புகளுக்குக்கூட ஒழுங்காகச் செல்வ தில்லை. எந்நேரமும் கணினியில் ஏதா வது செய்து பழகிக் கொண்டிருந்தவ ருக்கு இப்போது கம்ப்யூட்டர் இல்லா மல் போனதும், ஒரு கை ஒடிந்தது போலாகிவிட்டது. தவிர, இப்படி திடீ ரென்று கணினிப் பயிற்சியை நிறுத்தி விட்டால் இதுவரை கற்றுக் கொண்ட தும் பயனில்லாமல் மறந்துபோய்விடும் என்று கேட்ஸூக்குத் தோன்றியது. எப்படியாவது மீண்டும் பழையபடி

கம்ப்யூட்டரில் வேலை செய்தாக வேண்டும் என்று பிடிவாதமாக இருந்தார். இதற்காக, அவர் தம்முடைய சிறுவாட்டுக் காசையெல்லாம் கம்ப்யூட்டர் வாடகைக்குச் செலவழிக்க வேண்டியதாயிற்று.

'கையிலிருந்து காசு செலவழிக்காமல் கம்ப்யூட்டரைத் தொடர்ந்து பயன்படுத்த வேண்டும். அது எப்படி?' என்கிற திசையில்தான் பில் கேட்ஸின் சிந்தனை ஓடியது.

* இள வயதில் பில் கேட்ஸ்...



"யார் இந்தப் பொடிப் பயல்?" என்று பில் கேட்ஸை முறைத்தார்கள்.

அந்தக் காலத்தில், கம்ப்யூட்டர் தொழில்நுட்பம் ஆரம்ப நிலையில் இருந்ததால், அப்போதைய கணினிகளில் திடீர் திடீரென்று புதிய பிரச்னைகள் முளைத்துக் கொண்டிருந்தன. எல்லாம் ஒழுங்காகச் சென்று கொண்டிருக்கும். ஆனால், திடுதிப்பென்று திரை இருண்டுவிடும். கணினி பதிவுசெய்த தகவல்களும் மாயமாய் மறைந்துவிடும்! கம்ப்யூட்டர் வைத்திருந்தவர்கள் எல்லோருமே இதை நினைத்து அரண்டு போயிருந்தார்கள்.

இதனால், அப்போதைய நிறுவனங்கள் புதிதாக கம்ப்யூட்டர் வாங்குவதற்கோ, வாடகைக்கு எடுப்பதற்கோ பயந்தன. அப்படியே வாங்கினாலும் 'ஏதாவது பிரச்னை ஏற்பட்டால் அப்படியே திருப்பிக் கொடுத்துவிடுவேன்' என்கிற கட்டாய கேரண்டியுடன்தான் வாங்கப்பட்டன!

இதைப் பற்றித் தெரிந்துகொண்ட பில் கேட்ஸுக்கு, ஒரு தில்லாலங்கடி யோசனை தோன்றியது. உள்ளூரில், பெரிய கம்ப்யூட்டர் ஒன்றை வாடகைக்கு எடுத்துப் பயன்படுத்திக் கொண்டிருந்த ஒரு நிறுவனத்திடம் சென்று, 'ஐயா, உங்களுக்கு ஏராளமாகப் பணம் சேமிக்க நான் ஒரு வழி சொல்லட்டுமா?' என்றார் பவ்யமாக.

'யார் இந்தப் பொடிப் பயல்?' என்பதுபோல் பில் கேட்ஸை முறைத்த அவர்கள், நல்ல வேளையாக அவர் சொன்னதைக் காது கொடுத்துக் கேட்டார்கள். ஏற்கெனவே அந்த கம்ப்யூட்டருக்காக ஏகப்பட்ட வாடகை கொடுத்த அனுபவத்தால் நொந்து நூலாகிப் போயிருந்தது அந்த கம்பெனி.

அவர்களிடம் பில் கேட்ஸ் கேட்ட ஒரே கேள்வி இதுதான். 'உங்கள் கம்ப்யூட்டரில் பிரச்னைகள் எதுவும் இருந்தால், வாடகை தர வேண்டியதில்லை என்றுதானே ஒப்பந்தம்?'

'ஆமாம்.'

'அப்படியானால் அந்த கம்ப்யூட்டரை எங்களிடம் கொடுங்கள். அதில் ஏகப்பட்ட பிரச்னைகளை நாங்கள் கண்டுபிடிக்கிறோம். அதன்பிறகு, நீங்கள் கம்ப்யூட்டர் வாடகைக்காக ஒரு நயா பைசா செலவழிக்க வேண்டியதில்லை!'

(தொடரும்)

Estd. 1989 ஸ்ரீசுந்தர விநாயகர் துணை உ தேவதானப்பட்டி ஸ்ரீ காமாட்சி அம்மன் துணை



# சன் டிராவல்ஸ்

தினசரி காலை காபி, 3 வேளை பிராமணாள் உணவு, தினசரி 1 லிட்டர் மினரல் வாட்டர் தங்கும் வசதியுடன் 3 Tier இரயில் சுற்றுலாக்கள் சென்னையில் இருந்து புறப்படுகின்றது

---

12-02-07 (மகா சிவராத்திரி சுற்றுலா) & 23-03-07 & 15-04-07 06-05-07 & 21-05-07 & 20-06-07 முதல் 10 நாட்கள் : **ரூ. 4500**

டெல்லி–திரிவேணி–**காசி**–வியாசகாசி–சாரணாத்–கயா–புத்தகயா–கல்கத்தா–பூரி– புவனேஸ்வர்–கோனார்க்

---

09-02-07 (மகா சிவராத்திரி சுற்றுலா) & 20-03-07 & 12-04-07 03-05-07 & 18-05-07 & 17-06-07 முதல் 13 நாட்கள் : **ரூ. 5990**

மதுரா–ஆக்ரா–பிருந்தாவன்–டெல்லி–ஹரித்துவார்–ரிஷிகேஷ்–திரிவேணி–**காசி**–வியாசகாசி–சாரணாத்–கயா–புத்தகயா–கல்கத்தா–பூரி–புவனேஸ்வர்–கோனார்க்

---

06-02-07 (மகா சிவராத்திரி சுற்றுலா) & 17-03-07 & 09-04-07 30-04-07 & 15-05-07 & 14-06-07 முதல் 18 நாட்கள் : **ரூ. 7990**

**பண்டரிபுரம்–மும்பை–உஜ்ஜைனி (மகா காளேஸ்வரர் ஜோதிர் லிங்கம்)**–ஜெய்பூர்–மதுரா–ஆக்ரா–பிருந்தாவன்–டெல்லி–ஹரித்துவார்–ரிஷிகேஷ்–திரிவேணி–காசி–வியாசகாசி–சாரணாத்–கயா–புத்தகயா–கல்கத்தா–பூரி–புவனேஸ்வர்–கோனார்க்

---

09-05-07 & 18-05-07 & 17-06-07 முதல் 13 நாட்கள் : மதுரா–ஆக்ரா பிருந்தாவன்–டெல்லி–ஹரித்துவார்–ரிஷிகேஷ்–**பத்ரிநாத்–கேதார்நாத்** **ரூ. 5990**

★ இத்துடன் **அயோத்தி–நைமிசாரண்யம்–திரிவேணி–காசி–கயா**–கல்கத்தா–பூரி–புவனேஸ்வர்–கோனார்க் உள்பட 20 நாட்கள் **ரூ. 8700**

---

09-02-07 & 20-03-07 & 12-04-07 & 03-05-07 & 18-05-07 & 17-06-07 முதல் 12 நாட்கள் : மதுரா–ஆக்ரா–பிருந்தாவன்–டெல்லி குருக்ஷேத்திரம்–சண்டிகார்–**சிம்லா–குப்ரி–மணிக்கரன்–குளு–மணாலி**–ரோத்தங்பாஸ்–வசிஷ்டாபாத் **ரூ. 6490**

★ இத்துடன் அமிர்தசரஸ்–வாகாபார்டர்–**ஜம்மு–வைஷ்ணவதேவி** உள்பட 15 நாட்கள் **ரூ. 7590**

---

20-03-07 & 15-04-07 & 06-05-07 & 18-05-07 & 17-06-07 முதல் 12 நாட்கள் :

பூரி–புவனேஸ்வர்–கோனார்க்–கல்கத்தா–சயன்ஸ்சிட்டி–**டார்ஜிலிங்–கேங்க்டாக் (சிக்கிம்)** சங்குலேக்–பாபாமந்திர்–மந்தாகினி வாட்டர் பால்ஸ் **ரூ. 6490**

---

20-03-07 & 12-04-07 & 04-05-07 முதல் 15 நாட்கள் : **ரூ. 6990**

போபால்–சாஞ்சி–ஜான்சி–கஜிராஹோ–குவாலியர்–ஆக்ரா–மதுரா–சிக்கந்த்ரா–நைமிசாரண்யம்–அயோத்தி–நாசிக்–திரியம்பகம்–அஜந்தா–எல்லோரா–குஷ்னேஷ்வரம்–மும்பை

---

16-03-07 & 20-04-07 & 18-05-07 முதல் அழகிய அந்தமான் தீவுகள் சுற்றுலா

ரோஸ் தீவு–வைப்பர் தீவு–கார்பின் கேவ் கடற்கரை–சாந்தோம் மர அறுவை மில்–மிருக காட்சி சாலை–செல்லுலார்ஜெயில்–ஜாலி பாய் தீவு–ரெட்ஸ்கின் தீவு–மியூசியம்

★ சென்னையிலிருந்து அந்தமான் போக வர A/c பங்க் கிளாஸ் கப்பல் பயணம் உணவு தங்கும் வசதி உள்பட 10 நாட்கள் **ரூ. 6990**

★ மேற்கண்ட வசதியுடன் கப்பல், திரும்பிவர விமானம் மூலம் 8 நாட்கள் கட்டணம் **ரூ. 11990**

★ மேற்கண்ட வசதியுடன் விமானம் மூலம் போக, வர 6 நாட்கள் கட்டணம் **ரூ. 14990**

---

**அமர்நாத், கைலாஷ், மூணாறு, நேப்பாள், இலங்கை, சிங்கப்பூர், மலேசியா சுற்றுலாக்களுக்கு அணுகவும்**

**★ 60 நாட்களுக்கு முன் முழுப்பணம் செலுத்துவோர்க்கு கட்டணத்தில் 5% சலுகை உண்டு.**

* L.T.C. ரசீது தரப்படும். **II Tier A/c & III Tier A/c சுற்றுலா உண்டு**

# சன் டிராவல்ஸ்

Prop. K. சிதம்பரம், B.Sc., B.Ed.,
செல் : 98421 - 56668

**மதுரை :** 3, தெற்கு மாசி வீதி, T.M. கோர்ட் (நரசுஸ் காபி எதிரில்) மதுரை – 1. போன் : 2341133

**சென்னை :** 30, நடேசன் தெரு, (சிவா–விஷ்ணு ஆலயம் அருகில்) T. நகர், சென்னை–17. போன் : 24359194, செல் : 93645-59194

**திருப்பூர் :** J.R. சந்திரசேகர், 33-C, சேரன் நகர், சினி பார்க் தியேட்டர் ரோடு, திருப்பூர். செல் : 98428 96668

**கும்பகோணம் :** பிரசாத் போட்டோ ஸ்டுடியோ, 13-B, கோதண்டபாணி தெரு, கும்பகோணம். போன் : 0435 - 2433550

**பெங்களூர் :** S. பிரபாகரன், 38, ரிச் மேன்ட் ரோடு, Opp. : கேத்திட்ரால் ஹைஸ்கூல், பெங்களூர்–25. ☎ 25511690, செல் : 99002 - 39445

# விமர்சனம்

ஒரு மனிதனோட வாழ்நாளை இரண்டு மணி நேரத்துல சினிமாவா சொல்றது ரொம்பக் கடினமான விஷயம். ஆனா அதைச் சாத்தியமாக்கறதுலதானே மணிரத்னத்தோட திறமை இருக்கு? நிரூபிச்சிருக்காரு!

'முடியாது'ன்னு சொல்றதையே வாழ்க்கையா கொண்டவங்க மத்தியில, கனவு கண்டதை நிஜமாக்கத் துடிக்குற மனிதனா அபிஷேக். முதல் சீன்ல ஆரம்பிச்சு முடிவு வரைக்கும் அற்புதமான பெர்ஃபாமென்ஸ். வாழ்க்கைல ஜெயிக்கிற வெறியை பிரதிபலிக்கறதும், மனைவிக்காக உருகறதும், நண்பராகப் போயிட்ட எதிரியைப் பந்தாட முடியாம மருகுறதும், தன் மேல சுமத்தப்பட்ட குற்றச்சாட்டைத் தவிடுபொடியாக்கத் துடிக்கறதும்... சத்திப் போடணும். (அமிதாப் அழுதாராம் படம் பார்த்துட்டு).

ஐஸ், ஐஸ்தான். உணர்வுகளை உற்சாகமா வெளிப்படுத்தி இருக்காரு. அவரோட டான்ஸ் ஏ ஒன். கோர்ட்டுல கணவருக்காகப் பேசும்போது நடிப்புல தூள் பரத்துறாங்க.

மாதவன், கொடுக்கப்பட்டதை உணர்ந்து செஞ்சிருக்காரு. சிரிச்சுக்கிட்டே அபிஷேக்கை அவர் துடிக்க வைக்கறது அழகு. வித்யாபாலன் கண்கலங்க வச்சிடறாரு. தன்னோட இயலாமையை அவர் வெளிப்படுத்தும்போது மனசு நொந்து போயிடுது.

பத்திரிகையாளரா வர்ற மிதுன் சக்ரவர்த்தியோட பாத்திரப் படைப்பு அருமை. மிடுக்கும் சொடுக்கும் குறையல. குழந்தையையும் இன்னிட்டுத் தொட்டிலையும் ஆட்டறதை அவர்கிட்ட கத்துக்கலாம்.



மணிரத்னத்துக்கு முதுகெலும்பா உழைச்சிருக்காங்க ஒளிப்பதிவாளர் ராஜீவ்மேனனும், இசையமைப்பாளர் ஏ.ஆர்.ரஹ்மானும். ஒவ்வொரு ஷாட்டையும் நேர்த்தியா பதிவு பண்ணினதுல மேனனோட திறமை பளிச்சிடுது. பின்னணியில ஆரம்பிச்சு எல்லாப் பாடல்களையும் முணுமுணுக்க வச்சுட்டாரு நம்ம மான். அழகம்பெருமாளோட வசனங்கள் கொஞ்சம் மழை; கொஞ்சம் நிலவு. வைரமுத்துவின் வரிகள்ல ஐஸ்க்ரீம் குளிர். சூர்யாதான் அபிஷேக்குக்கு டப்பிங்காம்! நம்பவே முடியல. அவ்வளவு தத்ரூபம்!

## குரு

இப்படிப் படத்துல பணிபுரிஞ்சிருக்குற ஒவ்வொரு கலைஞருமே செமத்தியா உழைச்சிருக்காங்க. பலன், உலகத்தரத்துல ஒரு தமிழ்த் திரைப்படம்!

# தாமிரபரணி

'அடிதடி' ஹரியோட அடுத்த படம். வழக்கம்போல அரிவாள் சத்தத்தோடு, கொஞ்சம் குடும்பப் பாசத்தையும் கலந்து கட்டித் தந்திருக்காரு. மாப்ளையால பிரிஞ்ச மாமன் குடும்பம், மறுபடி மாப்ளை யாலயே சேர்ற கதை. விஷால் வெளுத்து வாங்கியிருக்காரு. டிரெயினை நிறுத்தி அவர் அறிமுகமாகிற காட்சி அசத்தல். தொடர்ந்து காதல், மோதல், அரிவாள் வெட்டுன்னு மனுஷன் களேபரப்படுத்துறாரு. தன்னை லவ் பண்ற வளை உதாசீனப் படுத்தறதும், அவ தன்னோட மாமன் பொண்ணுன்னு தெரிஞ்சதும் அவ ளுக்காக உருகறதும் இதம். புதுமுகம் பானு, இன்னும் கொஞ்சம் ஸ்லிம்மாகணும். திவுல மாட்டிக்கிட்டு அவர் படுறபாடு சோகம் ததும்ப வைக்குது.

கேரக்டர் ரோல்ல பிரபுவும் நதியாவும். அமைதியான நடிப்புல ஆழம் அதிகம். மனைவி சொன்னதுக்காகப் பல வருஷங்கள் கழிச்சும் கால்ல மெட்டி யோட பிரபு வலம் வர்றது பாசத்தைக் கொப்புளிக்க வைக்குது. மனோரமா, ரோகிணி, நாசர், விஜயகுமாரெல்லாம் கதைக்குத் தேவையான பங்களிப் பைத் தந்திருக்காங்க. கஞ்சா கறுப்போட அலம்பல் தாங்கல.

தூத்துக்குடியை ப்ரியனோட கேமரா ரொம்ப அழகா பதிவு பண்ணியிருக்கு. ராக்கி ராஜேஷோட சண்டைக் காட் சிங்க இடி மாதிரி இறங்குது. யுவன் சங்கர் ராஜா இசையில ரெண்டு பாடல் கள் (தாலியே தேவையில்ல, கறுப்பான கையால - பக்திப் பாட்டை இப்படியா ரீமிக்ஸ் பண்ணி காலி பண்றது!) நல்லாருக்கு.

ஹரியோட திரைக்கதை நேர்த்தி பிரமிக்க வைக்குது. கூடவே சஸ்பென்ஸ் வேற. படம் எக்ஸ்பிரஸ் வேகத்துல போகுது. எங்கயும் தொய்வே இல்ல. காதலைக்கூட நல்லா அப்ரோச் பண்ணி யிருக்காரு. விஷால் குடும்பத்துக்காகக் காதலைத் தியாகம் பண்ணத் துடிக்கற தும், குடும்பமே தடுக்கறதும் அருமை! ஆனா ஒரு சந்தேகம், தாமிரபரணின்னு ஏன் இந்தப் படத்துக்கு பேர் வச்சாரு? சுத்தமா சம்பந்தமே இல்லாத தலைப்பு.



**- லஜ்ஜாவதி**

# சிரிப்பாலஜி

"போரில் நீ புறமுதுகுகாட்டி ஓடி வந்ததற்காகவா மன்னர் உன்னைச் சிறையில் தள்ளினார்?"

"ஆமாம்... அவரை முந்திக் கொண்டு ஓடி வந்ததற்காக...!"

- தஞ்சை தாமு





"ஐ லவ் யூ'ன்னு என் காதலி கிட்ட சொல்ல பல மாதங்கள் தவிச்சிருந்தேன்."

"அப்புறம்...?"

"ஏண்டா சொன்னோம்னு வாழ்க்கை பூரா தவிச்சு நிக்கறேன்!"

- காயக்காடு ராமகிருஷ்ணன்

"நாங்கள் ஜெயித்தால் காஞ்சீபுரத்துக்கு யூனியன் பிரதேச அந்தஸ்தைப் பெற்றுத் தருவோம்.."

- ராஜி ராதா





"உங்க இதயத்துல துடிப்பு அதிகமா வருது."

"சரியாப் பாருங்க. உங்க ஸ்டெதஸ்கோப், வைப்ரேஷன்ல வெச்சிருக்கிற என் செல்ஃபோன் மேல அழுத்திட்டிருக்கு."

- சென்னிமலை செந்தில்குமார்

# அமரர் கல்கி

# எது அழகு?

பெண்கள் எல்லாரையும் தாய்மார்களாக வும் சகோதரிகளாகவும் பராசக்தியின் வடிவங்களாகவும் கருதிப் போற்றும் பண்பாடு பாரத நாட்டின் பண்பாடு. அவர்களை முன்னிறுத்தி அழகுப் போட்டி நடத்துவது எவ்வளவு அருவருக்கத்தக்க விஷயம்?

தமிழ்நாட்டின் மரபுக்கு முற்றும் விரோத மான இந்த அழகுப் போட்டியை நினைத் துத் தமிழ் மக்கள் எப்படி ஆத்திரப்படாமல் இருக்க முடியும்?

அழகு என்பது கடவுள் அளிக்கும் வரப்பிரசாதம்; மனிதர்களால் வளர்த்துக் கொள்ளக்கூடியது அல்ல. பின், அழகுப் போட்டி வைப்பதின் பொருள் என்ன? அழகுப் போட்டிப் பரிசைக் கடவுளுக்கு அல்லவா கொடுக்க வேண்டும் அல்லது அந்த அழகிகளின் பெற்றோர்களுக்கு அல்லவா அளிக்க வேண்டும்?

பெண்களிலே அழகுப் போட்டி வைப்பது என்றால், அதற்குத் தராதரம் எப்படிக் கண்டுபிடித்து முடிவு செய் வது? பட்டணங்களிலே சிவப்பு நிறத்துடன் மேனி மினுக்குகிற பெண்கள்தான் அழகிகளா?

'திருநெல்வேலிச் சீமையில் மறக் குலத்து ஏழைச் சகோதரிகள் மலைக் காடுகளில் விறகு பொறுக்கிக் கட்டிக் கொண்டு நடந்து வருவார்கள். அவர்களு டைய அழகுக்குக் கால் தூசி பெற மாட் டார்கள் பட்டணத்தில் பவுடர் பூசி வளரும் நாகரிக மங்கையர்கள்' என்கிறார் ஒரு நிருபர். இதிலிருந்து அழகை எடை போட்டுப் பார்ப் பது எவ்வளவு கடினமான வேலை என்று புரிகிறது.



மதராஸில் பொறுக்கப்பட்டவர் கள் பம்பாய்க்குப் போவார்களாம். பம்பாயி லிருந்து பொறுக்கப்பட்டவர்கள் அமெ ரிக்கா செல்வார்களாம். அங்கேயுள்ள ஸ்திரீகள் முத்துச் சுண்ணாம்பு அடித்தவர் களைப் போல வெள்ளை நிறம் பெற்றுத் திகழ்வார்கள். அவர்களும் இவர்களும் சேர்ந்து அழகுப் போட்டியிடும்போது தீர்ப்புக் கூறுவது எப்படி? அமெரிக்காவின் அழகு நீதிபதிகள், அளவு நாடா (டேப்) வைத்துக் கொண்டு நம் சகோதரிகளின் மூக்கையும் காதையும் அளந்து பார்ப்பதற்கு உடன்பட வேண்டியதாயிருக்குமே?

இதற்கு நாட்டு மக்கள் சிறிதும் ஆதரவு காட்ட மாட்டார்கள் என்று நம்புகிறோம்.

- **'பெண் தெய்வங்கள்'**
**வானதி வெளியீடு**

# தமிழ்ப் படங்களுக்குத் தடா!

தமிழ்ப் படங்களை, தெலுங்கில் டப்பிங் செய்து, வெளியிடுவதற்குத் தடை விதிக்கப்பட்டிருக்கிறது. தெலுங்குப் பட அதிபர்களின் இந்த திடீர் முடிவுக்குக் காரணம் ஒரிஜினல் தெலுங்குப் படங்களை ஓரங்கட்டும் அளவுக்குத் தமிழ் டப்பிங் படங்கள் வெற்றி பெறுவதுதான். சந்திரமுகி, அந்நியன், கஜினி இவற்றின் வெற்றிகளைத் தொடர்ந்து, சமீப காலத்தில் பந்தயக்கோழி (சண்டைக்கோழி), பொக்ரு (திமிரு) இரண்டும் சூப்பர்ஹிட்! இந்த டப்பிங் வெற்றிகள் ஒரிஜினல் தெலுங்கு ஹீரோக்களையே மிரள வைத்திருக்கின்றன.

பாராளுமன்ற தொகுதி சீரமைப்பு நடவடிக்கை, பல வி.ஐ.பி.களின் வயிற்றில் புளியைக் கரைத்திருக்கிறது. இந்தப் பட்டியலில் சபாநாயகர் சோம்நாத் சாட்டர்ஜி, துணை சபாநாயகர் சரண்ஜித் சிங் அட்வால், உள்துறை அமைச்சர் சிவராஜ் பாட்டீல், சச்சின் பைலட் என்று பலரும் அடக்கம். பலர் தாங்கள் போஷித்து வந்த தொகுதிகளை இழக்க நேரிடும் அபாயம் ஏற்பட்டுள்ளது. சிலர் தொகுதி சீரமைப்பு கமிஷனின் தலைவர் குல்தீப் சிங்கைச் சந்தித்து, 'எப்படியாவது எனது தொகுதியை விட்டுக் கொடுங்கள்' என்று கேட்டிருக்கிறார்கள்!

மும்பை கார்ப்பரேஷனுக்கு பிப்ரவரி முதல் தேதி தேர்தல் நடக்கிறது. காங்கிரசும் சிவசேனாவும் நீயா, நானா என்று களமிறங்க இருக்கின்றன. இந்தியாவின் நம்பர் ஒன் மாநகராட்சி மும்பைதான். மும்பை மக்கள் வாக்களித்து 227 மாநகராட்சி உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கப் போகிறார்கள். மும்பை மாநகராட்சியின் வருடாந்திர பட்ஜெட் பன்னிரண்டாயிரம் கோடி ரூபாய்! மும்பை மாநகராட்சி, மருத்துவக் கல்லூரி நடத்துகிறது என்பது பலருக்குத் தெரியாத செய்தி.

- எஸ்.சி.எம்.



# ஜோ-சூர்யாவின் புதிய அவதாரம்!

ஆட்டிஸத்தால் பாதிக்கப்பட்டவர்களுக்கு தமிழகத்தில் பயிற்சி அளிக்கும் ஒரே மையம் எது தெரியுமா? 'வீ கேன்' நிறுவனம்தான். கிதா ஸ்ரீகாந்த் மற்றும் ஹேம மாலினி ஜெயராம் என்கிற இரு பெண்மணிகளின் தலைமையில் செயல்படும் இந்நிறுவனம், ஆட்டிஸக் குழந்தைகளுக்காகப் பல்வேறு திட்டங்களைச் செயல்படுத்தி வருகிறது. இவர்களோடு திரைத்துறையைச் சேர்ந்த சூர்யா - ஜோதிகா தம்பதியும் அண்மையில் கைகோத்துள்ளனர். இவர்களின் உதவியோடு இச்சமுதாயத்தின் மூலை முடுக்குகளையெல்லாம் அணுக முடியும் என்று நம்புகிறது 'வீ கேன்.'

இந்நிறுவனத்தால் நடத்தப்படும் ஆட்டிஸக் குழந்தைகளின் மையத்துக்கு வருகை புரிந்து, அவர்களோடு தங்களது நேரத்தைச் செலவழித்துப் பழகி, மகிழ்ச்சிப்படுத்தி, அவர்களுக்கு அன்பையும் ஆதரவையும் அளித்து வருகின்றனர் சூர்யாவும் ஜோதிகாவும்.

ஜெயேந்திரா பஞ்சாபகேசன் மற்றும் பி.சி.ஸ்ரீராம் இருவரும் இணைந்து ஆட்டிஸம் பற்றிய விழிப்புணர்வுப் படமொன்றைத் தயாரித்துள்ளனர். இப்பட வெளியீட்டு விழாவுக்கும் வந்திருந்தார் சூர்யா.

"ஆட்டிஸம் பத்திப் பல பேருக்கு இங்க தெரியல. அந்தக் குழந்தைகளைக் கண்டுபிடிக்கவே சிரமப்படறாங்க. அது ஒரு நோயே இல்ல. மனவளர்ச்சி சம்பந்தப்பட்ட ஒரு கோளாறு. ஐந்நூறு பேர்ல ஒருத்தர் ஆட்டிஸத்தால அல்லது ஆட்டிஸ அறிகுறிகளோடு இருக்கறதா கண்டுபிடிச்சிருக்காங்க. சின்ன வயசுலயே இந்தக் குறைபாட்டைக் கண்டுபிடிச்சுட்டா, அந்தக் குழந்தையோட வாழ்க்கைல மறுமலர்ச்சிய ஏற்படுத்திடலாம்.

'வீ கேன்' சேவை மனப்பான்மையோடு இந்தக் குழந்தைகளுக்காகப் பாடுபடுது. அதுல என்னையும் ஜோவையும் இணைச்சுக்கறதுல ரொம்பப் பெருமையா ஃபீல் பண்றேன்" என்று பேசிய சூர்யா, 'கஜினி' படத்தில் 'ஷார்ட் டைம் மெமரி லாஸ்' கொண்ட இளைஞனாக நடித்ததைப்போல் ஆட்டிஸக் குறைபாடுகொண்ட கதாபாத்திரம் கிடைத்தால் நடிக்க மிக ஆவலாக இருப்பதாகத் தெரிவித்தார்.

- மதுமிதா

## அஞ்சலி

# நான் இறந்து விட்டேன்!

**நகைச்சுவை மேதை, எழுத்தாளர் ஆர்ட் புக்வால்ட், கடந்த ஜனவரி 17ஆம் தேதி, தமது 81ஆவது வயதில் காலமானார்.**

• வாரத்தில் மூன்று கட்டுரைகள் என்று எழுதியவர். உலகில் சுமார் 525 பத்திரிகைகளில் ஒரே சமயம் அவை வெளியாகிக் கொண்டிருந்தன. எட்டாயிரம் நகைச்சுவைக் கட்டுரைகளை எழுதியுள்ள புக்வால்ட்டுக்கு உலகமெங்கும் ரசிகர் பட்டாளம் உண்டு.



* ஆர்ட் புக்வால்ட்

• கடந்த ஆண்டு சிறுநீரகத்தில் ஏற்பட்டு, பிரச்னையால், காலுக்கு ரத்தம் செல்வதில் பாதிப்பு ஏற்பட்டு, காலையே (முழங்காலுக்குக் கீழ்) நீக்கும்படி ஆகிவிட்டது.

• தொடர்ந்து டயாலிஸிஸ் செய்ய வேண்டும் என்பதால் ஒரு (முதியோர் இல்லம் போன்ற) சிகிச்சை நிலையத்தில் ஐந்து மாதங்கள் இருந்தார். திடீரென்று ஒரு நாள் "எனக்கு டயாலிஸிஸூம் வேண்டாம்... ஒண்ணும் வேண்டாம்" என்று சொல்லிவிட்டு வீடு திரும்பிவிட்டார். அதன்பிறகு டயாலிஸிஸையும் நிறுத்திவிட்டு ஆறு மாதங்களுக்கு மேல் வாழ்ந்திருந்தார்.

• மிகப்பெரிய இலக்கியப் பரிசான புலிட்ஸர் பரிசைப் பெற்றார். இதைவிட அவருக்குப் பெயர் பெற்றுத் தந்தது, 1992-ல் ஹாலிவுட் பாரமவுண்ட் கம்பெனி மீது வழக்குத் தொடுத்து அவர் வெற்றி கண்டதுதான். எட்டி மர்ஃபி நடித்த 'கமிங் டு அமெரிக்கா' என்ற படம் தமது கதையை காப்பி அடித்து எடுக்கப்பட்டது என்று புக்வால்ட் தொடுத்த வழக்கில் அவருக்கு ஒன்பது லட்சம் டாலரை பாரமவுண்ட் கொடுத்தது.

• சிகிச்சை இல்லத்தில் ஐந்து மாதங்கள் இருந்தபோது 'டு ஸூன் டு ஸே குட்பை' என்ற புத்தகத்தை எழுதினார்.

• தாம் இறந்ததும் ஒளிபரப்ப வேண்டும் என்று சொல்லி, தாம் காலமானதை அவரே அளிப்பது மாதிரி வீடியோ எடுத்து வைத்திருந்தார். நியூயார்க் டைம்ஸ் இணைய தளத்தில் ஒளிபரப்பக் கொடுத்திருந்தாராம். அதில் "நான் போய்விட்டேன். நான் இப்போதுதான் செத்து முடிந்தேன்..." என்று சொல்லியிருந்தார்.

• தமது இரங்கல் சர்வீஸ் கார்னகி ஹாலில் நடத்தப்பட வேண்டும் என்றும், கூட்டத்துக்கு வருபவர்கள் கடிகாரத்தைக் கழற்றி வெளியே வைத்துவிட்டு வர வேண்டும் என்றும் தெரிவித்திருந்தார். கடிகாரம் இருந்தால் தங்கள் மற்ற வேலையைக் கவனிப்பதற்காக பாதி சர்வீஸிலேயே போய்விடக் கூடும் என்பதால் இந்த நிபந்தனை!

**- கடுகு**



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.

கிளை நிறுவனம் : புதிய எண். 16, பழைய எண். 19, முதல் மாடி, 30வது தெரு,
தில்லைகங்கா நகர், நங்கநல்லூர், சென்னை – 600 061. போன் : 22333214

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 18 ஆண்டுகளாக நடைபெற்று வரும் **"ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்"** தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் **பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர்** ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/ வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை **ஸ்ரீ சாரதா சக்தி பீடம்** என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்

# தொடர் கதை

# கொசு 4

இனிய தமிழ் அசைவ உணவகத்தின் வெளிப்புறத் தோற்றத்தை வைத்து, அதன் மேல் மாடியின் பின்புறம் அமைந்திருந்த வட்டச் செயலாளரின் அலுவலக அறையை எடை போட்டுவிட முடியாது. வட்டச் செயலாளர் ஆன முதலாமாண்டு நிறைவை ஒட்டி அவர் அந்த அறையைக் கட்டினார். நானூறு சதுர அடிகள் கொண்ட அறை. உள்புறம் முழுவதும் மர வேலைப்பாடுகள் செய்து சத்தத்தைத் தடை செய்திருந்தார். தரையில் விரித்திருந்த கம்பளம், கஸ்டம்ஸ் ட்யூட்டி கட்டாமல் எடுத்து வரப்பட்டது. ஒளிரும் சாண்டலியர் விளக்குகளும், கிரானைட் இழைத்த மேஜையும், தந்தச் சிற்பங்கள் அணிவகுத்த குஷன் சோபாக்களும், இன்ன பிறவும் அவரது ரசனைக்குச் சான்று சொல்பவை. இயற்கை அன்னையின் அழைப்புக்கு எனப் பிரத்யேகமாக ஒரு தனியறை இணைத்திருந்தார். பொதுவாக வட்டச் செயலாளர் செய்திகளை முந்தித் தரும் தினத்தந்தியை அங்கே அமர்ந்துதான் படிப்பது வழக்கம்.

தழையத் தழையத் தமிழ்த் தாலியும் நெற்றி நிறைத்த குங்குமமும் அணிந்த முதல் மனைவி வீட்டுக்கு வருபவர்களுக்கு, வாழை இலை போட்டு அவசியம் உண்டு வீட்டுச் சாப்பாடு. 'அம்மா கையால சாப்ட்டு எத்தினி நாளாச்சு' என்று உறிஞ்சி உண்டவர்களில் பெரும்பாலானோர் அவரது இன்னொரு சிறிய இல்லத்துக்கு வரக்கூடியவர்கள் இல்லை. அதற்கொரு தனித் தகுதி வேண்டும். அதிலும் விஞ்சியவர்களை மட்டுமே பொதுவாக அவர்தம் பிரத்யேக அலுவலகத்துக்கு அழைப்பார்.

முத்துராமனுக்கு அதுதான் வியப்பாக இருந்தது. அவனுக்கு வட்டத்தைத் தெரியும். கூட்டங்களில் பார்த்ததும் தோளில் தட்டி நலம் விசாரிக்கிற வட்டம். 'அப்பா எப்படி இருக்குறாரு?' என்று அன்புடன் இரண்டு சொற்கள். வீட்டுக்கு அழைத்ததில்லை. அதுவும் இரண்டாவது வீட்டுக்கு? வாய்ப்பே இல்லை. ஆனால் அவன் கேள்விப்பட்டிருக்கிறான். இரண்டு இனிய இல்லங்களைப் பற்றியும் மூன்றாவதான அந்த ரகசிய அலுவலகம் குறித்தும். என்றைக்காவது ஒருநாள் வட்டத்தின் அன்பு வட்டத்துக்குள் வர மாட்டோமா என்பது தான் அவனது நீண்டநாள் ஏக்கமாக இருந்தது. ஆனால், விதி அவனை நகரச் செயலாளரைத் தாண்டவிடாமல் அடித்துக்கொண்டிருந்தது.

என்றாவது ஒருநாள்... எப்போதாவது ஒரு தருணம்... கண்டிப்பாகத் தான் மேலே வந்தே தீர வேண்டும் என்பதே அவனது லட்சியமாக இருந்தது. படித்து முடித்து ஆபீசராகும் உத்தியோகமில்லை இது. தொண்டு செய்துதான் வந்தாக வேண்டும். அவனுக்குத் தெரியும் அது. எதற்கும் சளைக்காமல்தான் இயங்கிக் கொண்டிருந்தான். தீவிரமாக... மிகவும் உக்கிரமாக. அதிகநாள் அவகாசம் தேவைப்படும் என்று அவன் நினைக்கவில்லை. எப்படியும் பத்து வருடங்களுக்குள் தானொரு எம்.எல்.ஏ. ஆகிவிட முடியும் என்றுதான் நினைத்தான். பின்புலம் இல்லை. அதனாலென்ன? ஆர்வம் இருக்கிறது. கவனம் இருக்கிறது. நோக்கத்தில் திசை தடுமாறாத உறுதி இருக்கிறது. போதாது?

ஒரு சந்தர்ப்பத்துக்காகத்தான் அவன் காத்திருந்தான். ஒரு வகுப்பில் படிக்காமல் கடந்து மேலே போகிற சந்தர்ப்பம். திற




மைக்குக் கிடைக்கிற அங்கீகாரம் போல உழைப்புக்கும் ஒருநாள் கிடைக்காமலா போய்விடும்?

"நீ வேலைக்காரன்னு உன்னியக் கூப்புடல முத்துராமா. நீ மூளைக்காரன். அது எனக்குத் தெரியும். நம்ம பசங்களும் பல சந்தர்ப்பத்துல சொல்லியிருக்கானுக. போன எலக்சன் டயத்துல வீட்டுக்கு வீடு குங்குமச் சிமிழ் குடுத்தப்ப, நீதான் உள்ள குங்குமத்த ரொப்பி, ஒரு வெள்ளி காயின் வெச்சிக் குடுங்கன்னு சொன்னியாம்! வடிவேலு சொன்னான். என்னாமா ஒர்க் அவுட்டு ஆச்சு பாத்தல்ல? அதான், வோணும் எனக்கு. பொம்பளைங்கள கவர் பண்ணிரணும்டா. செலவு ஒரு மேட்டரே இல்லன்னு வையி. எனக்கு

இப்ப என்னா வோணும்? ஒரு கவன சர்ப்பு. ஜனவரில கட்சி மாநாடு பாளை யங்கோட்டைல நடக்கப் போவுது. மெயின் அஜண்டா இன்னா தெரியுமா? சென்ட்ரல் மினிஸ்டிரில ரெண்டு சீட் டுக்கு பை எலக்சன் வருதில்ல? அதுக்கு யாரப் போடலாம்னிட்டு முடிவு பண்ணப் போறாங்க..."

முத்துராமனுக்குக் குழப்பமாக இருந் தது. இவர் என்ன சொல்ல வருகிறார்? எப்படி இவரால் மத்திய அமைச்சர் பதவி வரை யோசிக்க முடிகிறது?

"ரெண்டு சீட்டு அங்க வேகண்டு. ஆள் போட்டாவணும். யாரப் போடுவாங்க? இது தினத்தந்தி படிக்கற அல்லாருக்கும் தெரியும். நான் அந்தச் சொல்லல. ரெண்டு தலைங்க புச்சா கேபினட்டுக் குள்ளார போச்சின்னா அந்த போஸ் டுக்கு இன்னும் ரெண்டு நவுரும். யார் அந்த ரெண்டு? ராஜ்ய சபாவுல வெத் துக்குப் பல்லு குத்திக்கினு குந்திக்கினு கீதுங்களே, அதுங்கள்ள ரெண்டு. ஏன்னா நமக்கு லோக்சபா எம்.பி. பவர் வேற இல்ல. அப்பிடியே நவுந்து நவுந்து வந்திச் சின்னு வையி. எப்பிடியும் எங்கயாச்சும் அதே ரெண்டு சீட்டு வேகன்சி வந்துதான் ஆவும். என்னிய ராஜ்ய சபா எம்.பி. ஆக்குவாங்கன்னுகூட நான் எதிர்பார்க் கல. அட்லீஸ்டு, அதுக்குப் பக்கத்து வூட்டு காம்பவுண்டு செவுரு மேல குந்திக்கற மாதிரியாச்சும் ஒரு சான்ஸ் இப்ப கிடைச் சாவணும். இத்த வுட்டேன்னு வையி. அடுத்த ரெண்டு வருசம் ஜென்ரல் எலக்சன் வர்ற வரைக்கும் இப்பிடியே வட்டமா சுத்திக்கினு இருக்க வேண்டியது தான்."

முத்துராமனுக்குப் பாதி புரிந்து, பாதி புரியாதது போலிருந்தது. ராஜ்ய சபா எம்பிக்களில் இருவர் அமைச்சரானாலும் அங்கு வேகன்ஸி ஏற்பட சந்தர்ப்பம் இல் லையே? ஆனால் மேற்கொண்டு கேள்வி கேட்டு வட்டத்தை டென்ஷன் ஆக்க வேண்டாம் என்று முடிவு செய்து, "சொல் லுங்க தலைவரே, நான் என்ன செய் யணும்?" என்றான் தீவிரமாக முகத்தை வைத்துக்கொண்டு.

"எனக்கு ஒரு ஐடியா வோணும், முத்து ராமா. மாவட்டச் செயலாளராண்ட நமக்கு நல்ல கனெக்சன் இருக்குது. வெவ சாய அமைச்சரும் வேண்டப்பட்டவரு தான். ஆனா பாரு... பாத்தா நல்லாருக்கி யான்னு கேக்கறாங்களே தவிர, எனக்கு நல்லது செய்யணும்னு அவிங்களுக்குத் தோண மாட்டேங்குது. எனக்கு அப்பால வந்த நாலு பயலுவ மேல பூட்டானுங்க. இருவது வருசமா கட்சில இருக் கேன். என்னா சொகத்தக் கண்டுட்டேன்? இந்த நெனப்பு சாஸ்தியாயிட்டா தூக்கம் வரமாட்டேங்குது, முத்து ராமா."

அவனுக்கு வியப்பாக இருந்தது. அதுநாள்வரை நான்கு வார்த்தை களுக்கு மேல் மொத்தமாகப் பேசியிராத வட்டச் செயலாளர். இப்படிக் கூப்பிட்டு சோபாவில் உட்கார வைத்துவிட்டு எதிரே மேசை மீது சம்மணமிட்டு அமர்ந்து நூறு



"சினிமாவுல ஆர்ட் டைரக்டரா இருக்கிறவரைக் கல்யாணம் செஞ்சுக்கிட்டது தப்பாப் போச்சுடி!"

"ஏன்? என்னாச்சு?"

"சொந்த வீடு வேணும்னு கேட்டா டேபிள் டாப் மாடல் பண்ணிக் கொடுத்துட்டாரு!"

- புதுவை கிருஷ்ணன்

'அரசியல் கலப்பில்லாமல் இனி விஜயகாந்த்தால் நடிக்க முடியாது' என்பதுதான் கோலிவுட்டில் இன்றைய பேச்சு. ஆனால் "அதெல்லாம் சும்மா. அவர் எப்பவும் அப்படிச் சொன்னதில்ல. நான் படம் தொடங்கும்போதே 'அரசியல் வேற, சினிமா வேற. ரெண்டையும் போட்டுக் குழப்பிக்க வேண்டாம்'னுதான் சொன்னார்" என்று கூறும் பட அதிபர் சேலம் சந்திரசேகரன், கேப்டனை வைத்து அரசியல் வாசனையின்றி 'சபரி' படத்தை எடுத்துள்ளாராம்.

இருதய நோய் நிபுணராக இப்படத்தில் நடித்திருக்கும் கேப்டன், ஒரு காட்சியில்கூட கட்சி சின்னத்தையோ, மோதிரத்தையோ காட்டவில்லையாம்.

"அவர் கொடுத்த ஒத்துழைப்பு மறக்க முடியாதது. கம்பெனிக்கு அதிக செலவு வைக்காத ஆர்டிஸ்ட். இந்தப் படம் இன்னொரு ரமணாவா கேப்டனுக்கு அமையும்" என்று நம்பிக்கையுடன் சொல்கிறார் படத்தின் இயக்குநர் 'அரசு' சுரேஷ். 'கஜினி' படத்தைத் தயாரித்த சேலம் சந்திரசேகரனின் படம் என்பதால் எதிர்பார்ப்புக்குப் பஞ்சமில்லை என்றாலும் விஜயகாந்தின் அரசியல் எதிர்காலத்துக்கு இப்படம் எவ்வளவு தூரம் உதவும் என்பதுதான் இப்போது தே.மு.தி.க.வினரின் கவலை.

- மிருணாளினி

# கேப்டனின் சைவப் படம்!

வருடம் பழகியவர்போல் பேசுகிற மனிதர்.

"முத்து, நீ ரகசியம் காப்பேன்ற நம்பிக்கையில சொல்லுறன்... எனக்கு ஒரு டக்கர் ஐடியா மட்டும் குடு. அது ஒர்க் அவுட்டு ஆயிருச்சின்னா நான் எங்கியோ போயிருவேன். எனக்கு ஹெல்ப் பண்ண உன்னிய மறக்காம கண்டிப்பா நல்லது செய்வேன். மாநாட்டுக்கு முன்னால நாம செய்யப் போற காரியம் ஹிட்டாகி, தலைவராண்ட போவணும். அட எவண்டா அவன், சூப்பரா ஒரு வேலை பண்ணிட்டானேன்னு அவரு ஆச்சர்யப்படணும். இன்னமே உப தேவதைங்கள நம்பி பிரயோசனமில்லன்னு முடிவுக்கு வந்துட்டேன்."

முத்துராமனுக்கும் அதுவே சரியென்று பட்டது. அவனளவில் நகரம் ஒரு உப தேவதை. வட்டம் தேவதை. நாளைக்கு வட்டம் உபதேவதையாகும். மாவட்டம் தேவதையாகும். தேவதைகளின் வழியே தெய்வத்தை அடைய வேண்டும். நீண்ட பயணம்தான். ஆனாலும் அதைத் தொடங்குவதற்கு இதோ ஒரு சந்தர்ப்பம் வந்திருக்கிறது.

பரபரவென்று யோசித்தான். ஒரு செயல். ஒரே ஒரு செயல். ஆனால் ஒட்டு மொத்த கட்சியாட்களின் கவனத்தையும் கவர வேண்டும். தலைவர் வரை சென்று தாக்க வேண்டும். வட்டம் சொன்னது போல, அந்தச் செயலின் வெற்றியை அவர் தலைவரின் காலடியில் சமர்ப்பித்து வணங்கும்போது, அவருக்கு டில்லி செல்லும் விமானத்தில் ஒரு டிக்கெட் கிடைத்தாக வேண்டும். என்ன செய்யலாம்?

வட்டம் மேசையிலிருந்து இறங்கி, நாற்காலிக்கு வந்தார். முத்துராமன் சடாரென்று எழுந்து அவரருகே சென்று கைகளைப் பிடித்தான்.

"ஒரு ஐடியா தலைவரே!"

"சொல்லு! சொல்லு!" என்று பரபரப்பானார்.

"கொசு!" என்றான் முத்துராமன்.

(தொடரும்)

# மணி, மந்திரம், ஔஷதம்

**புஷ்பராகம், பத்மராகம், கோமேதகம், வைரம், வைடூரியம், இந்திர நீலம், முத்து, மரகதம், பவழம், இவை ஒவ்வொன்றால் ஆன வெளிப் பிரகாரங்களை உடைய 'சிந்தாமணி கிருஹம்' என்ற அற்புதமான கோட்டையில் அம்பிகை தன்னை பாதுகாத்துக் கொள்ள வாசம் செய்கிறாள் என்று 'சௌந்தர்ய லஹரீ' என்ற மந்திர சாஸ்திரமாக போற்றப்படும் நூலின் எட்டாவது பாடலில் கூறப்பட்டுள்ளது. தன்னை பாதுகாத்துக் கொள்ள தேவியே டன் கணக்கில் இரத்தினங்களை உபயோகிக்கிறாள் எனில் பாமரர்களாகிய நாமும் ஏன் அவற்றை உபயோகிக்கக் கூடாது?**

எனது முப்பது வருட டாக்டர் தொழிலில், எந்த நோயாளிக்காவது ஆறு மாதத்திற்கு மேலாக வைத்தியம் செய்தும் பலனளிக்காத கேசுகளில் அவருக்கு ஏற்ற இரத்தினங்களை அணியச் செய்ததில் நல்ல குணம் கிடைத்தது. உதாரணமாக 2, 11, 20, 29 தேதிகளில் பிறந்தவர்கள் அல்லது பிறந்த தேதி, மாதம், வருடம் ஆகியவற்றை கூட்டி வரும் எண் 2 என்றாலும். தவிர, ஜூன் 21 - ஜூலை 20 தேதிகளுக்கு இடைப்பட்ட காலத்தில் பிறந்தவர்களும் 2-ம் எண்காரர் எனப்படுவர். இவர்களுக்கு அநேகமாக ஜீரணக் கோளாறுகள் இருக்கும். எந்த மருந்தும் பலனளிக்காது. ரூ.480 விலையுள்ள 'சைனீஸ் ஜேட்' என்ற இரத்தினத்தை அணிந்த பிறகு அவர்களது வயிறு நிரந்தரமாக குணமாகியது.

இதேபோல் 3, 12, 21, 30 தேதிகளில் பிறந்தவர்கள் (அல்லது பிறந்த தேதி, மாதம், வருடம் ஆகிய மூன்றையும் கூட்டினால் மூன்று ஆக வந்தாலும்) தவிர பிப்ரவரி 20 - மார்ச் 20 அல்லது நவம்பர் 21 - டிசம்பர் 21 தேதிகளுக்கு இடைப்பட்ட காலத்தில் பிறந்தவர்களையும் 3-ம் எண்காரர் என்கிறோம். இவர்களுக்கு தலைவலி வந்தால் அது எந்த மருந்துக்கும் கட்டுப்படாது. எமிதிஸ்ட் என்ற இரத்தினம் அணிய தலைவலி இருந்த இடம் தெரியாமல் குணமாகி விடுவது பலரது அனுபவம்.

*நவரத்தினங்களை அணிந்து பலன் ஏதும் ஏற்படவில்லை என பலர் சொல்வதற்கு நகைக் கடையில் மூன்றாந்தர இரத்தினங்களை வாங்கி அதுவும் சக்தி செய்யப்படாமல் அணிவதே காரணம். இரத்தினங்களை சக்தி செய்து அணிவது மிக அவசியம்.*

கான்சர் நோய் சீரியஸாகி சில வாரங்களே உயிர் வாழ்வாள் என்று சொல்லப்பட்ட ஒரு பெண்மணி வைடூரியம் மற்றும் மரகதம் அணிந்த பின்பு எழுந்து நடமாட ஆரம்பித்தாள். பவழம் அணிந்த பின்பு பிரிந்த தம்பதிகள் ஒன்று சேர்ந்தனர். வெண் பவழம் மற்றும் புஷ்பராகம் அணிந்து கொள்ள, சர்க்கரை வியாதி (டயபிடீஸ்) குறைந்தது. இதுபோல் தாமதமான பதவி உயர்வு கோர்ட் விவகாரம் சுமுகமாக முடிந்தது, தீராத வியாதிகள் குணமானது, நீண்ட நாட்களான பிரச்சினைகள் தீர்ந்தது போன்றவை நான் அனுபவத்தில் பார்த்துள்ளேன். மலச்சிக்கல் முத்து அணிந்த பிறகும் அலர்ஜி கோமேதகம் அணிந்த பிறகும் பல வருட தோல் வியாதிகள் பவழம், நீலம், லாபிஸ் லஸுலி அணிந்த பிறகும் குணமானது. கன்னிப்பெண்கள் பவழம் அணிய திருமணம் கைகூடியது. நீலக்கல் + புஷ்பராகம் + பவழம் அணிய, வியாபாரம் இலாபகரமாக நடைபெற்று வர தொடங்கியது.

செல்வராஜ் சங்கீதத்தில் புலமை உள்ளவர். ஆனால் சான்ஸ் ஏதும் கிடைப்பதாக இல்லை. 'அகேட்' என்ற இரத்தினம் அணிந்த பின் இன்று இலண்டன் தொலைக்காட்சி நிலையத்தில் முன்னணி இசையமைப்பாளராக இருக்கிறார். அருண்குமார் நல்ல ஓவியர். ஆனால் ஒன்று கூட விற்கவில்லை. அகேட் அணிந்த ஆறே மாதத்தில் நிறைய விற்பனையாகி இன்று கார், பங்களா என்று இருக்கிறார். இராமசாமி நடத்தி வந்த லாரி சர்வீஸ் பலத்த நஷ்டம். காரணம் அடிக்கடி நடந்த லாரி விபத்து. 'டர்க்வாய்ஸ்' இரத்தினம் ஒவ்வொரு லாரியின் டீசல் டாங்க்-ல் போட அதன் பிறகு விபத்து நிகழவில்லை.

நமது வாழ்க்கைப் பிரச்சினை, ஏழ்மை நீங்க முதலில் 'மணி'யின் (இரத்தினங்களின்) உதவியை நாட வேண்டும். இது பலனளிக்காத பட்சத்தில் மட்டுமே மந்திரங்களை உச்சாடனம் செய்ய வேண்டும். இதுவும் பலனளிக்காத ஒரு சில கேசுகளில் மட்டுமே 'மருந்து' என நம் முன்னோர் "மணி, மந்திரம், ஔஷதம்" என வரிசைப் படுத்தி வைத்துள்ளனர்.

உடை ஏதும் அணிந்து கொள்ளாமல் தெருவில் போக முடியுமா? இதே போல் வாழ்க்கைப் பிரச்சினை, பணக்கஷ்டம் உள்ளவர்கள் பொருத்தமான இரத்தினங்கள் அணியாமலிருப்பது உடை ஏதும் போட்டுக் கொள்ளாமல் தெருவில் நடமாடுவதற்கு சமம் என்றால் அது மிகையாகாது.

2-3 லட்சத்திற்கு கார், வீடு வைத்திருப்பதால் நமது வருமானம் அதிகரிக்காது. இவற்றால் அடிக்கடி செலவு நிச்சயம் உண்டு. செலவு ஏதும் வைக்காமல் பண வரவு, சௌகர்யங்கள் ஆகியவற்றை (மறைமுகமாக) தொடர்ந்து கொடுத்துக் கொண்டேயிருப்பது இரத்தினக் கற்கள் மட்டுமே!




**Dr. V. கிருஷ்ணமூர்த்தி**

**சனி, ஞாயிறு, திங்கள்:**
Raman House, Old No.21,
குப்பையா செட்டி தெரு, மேற்கு
மாம்பலம், சென்னை - 33.
Phone :(044) 2489 0370
(044) 6539 3214

**புதன், வியாழன், வெள்ளி:**
**Wednesday to Friday**
402/41, 38th 'A' Cross
26th Main (Opp. to SBM)
Jayanagar - 9th Block,
Bangalore - 69
Phone: (080) 3292 2523

+2

# ஒரே கனா என் வாழ்விலே...!

**சென்ற வாரம், கிராமத்திலிருந்து புறப்பட்டு சாதிச்ச சத்யாவோட அனுபவத்தைப் பார்த்தீங்க. நான் சிட்டி கேர்ள். என் அனுபவம் எப்படிப்பட்டது... பார்க்கலாமா?**

அன்று மட்டும் எங்களுக்கு ப்ரேயர் விநோதமாக இருந்தது. வழக்கமாக பெரு மதிப்புக்குரியவர்கள் நிற்கும் மேடையில் அன்று ஒரு புதிய முகம் தென்பட்டது. 'இவர்தான் சென்ற வருட ஸ்டேட் டாப்பர். நம் பள்ளியைச் சேர்ந்தவர்' என்று அறிமுகம் செய்து வைக்கப்பட்ட பின், தன்னால் மட்டும் எப்படி முதலிடம் பிடிக்க முடிந்தது என்று அந்த முன்னாள் மாணவர் பேசியபோது எனக்குள் ஒரு சிலிர்ப்பு. 'அடுத்த வருடம் நானும் இவரைப்போல மேடையேறு வேனா?'

**ப**த்தாவது வரைக்கும் சி.பி.எஸ்.ஈ.யில் படித்த நான், ப்ளஸ் ஒன்னுக்கு டி.ஏ.வி. மெட்ரிக்குலேஷன் பள்ளிக்கு மாறினேன். எல்லாப் பள்ளிகளாலும் லைப்ரரி, லேப், கம்ப்யூட்டர் வசதிகளை ஏற்படுத்தித் தர முடியும். ஆனால் அறிவுச் செல்வங்கள் உள்ள ஒரு சூழலை உருவாக்கித் தர முடியாது. அந்த மாதிரி சூழலில் நீங்கள் நன்றாகத் தேர்வுகளை எழுதி வெற்றி பெறும்போது, தன்னம்பிக்கை அதிகமா கிறது.

எங்கள் பள்ளியில் ஒரு பழக்கம் உண்டு. இன்றைக்கு நடத்தின பாடங் களுக்கு அடுத்த நாள் தேர்வு நடக்கும். இதனால் அப்புறம் பார்த்துக்கொள்ள லாம் என்கிற சாக்குபோக்கே கிடையாது. தேர்வுகளில் சிறு தவறுகளைக்கூட அனுமதிக்க மாட்டார்கள். பள்ளியில் நடத்தப்படும் தேர்வுகளைப் பிசிறின்றி எழுதுவது நல்ல பயிற்சியாகும். எப்பவுமே நம்மிடமுள்ள டெக்ஸ்ட் புக்தான் நமக்கு கீதை, பைபிள், குரான் எல்லாம்!

**நா**ன் டியூஷன் எல்லாம் போக வில்லை. டியூஷனில் பாடம் நடத்து வதற்கும் பள்ளியில் படிப்பதற்கும் நிறை யவே வித்தியாசங்கள் உண்டு. தேவையில் லாமல் நாம் குழப்பத்துக்கு ஆளாவோம். ஸ்கூல் டீச்சர்கள் அனுபவஸ்தர்கள். அவர்களை விடச் சிறந்த கைடு என்று யாரும் இல்லை.

நான் முந்தைய வருட கேள்வித்தாள்களை வீட்டில் உட்கார்ந்து கொண்டு தேர்வுபோல மூன்று மணி நேரத்துக்குள் எழுதி முடித்துப் பயிற்சி எடுத்துக் கொண்டேன். ஆசிரியர்களிடம் அதைக் காண்பித்து என் தவறுகளைத் திருத்தினேன்.

தேர்வுக்கு ஒரு மாதம்தான் இருக்கிறது என்று மோட்டு வளையத்தை வெறிக்க வேண்டாம். நல்ல மதிப்பெண்கள் எடுக்க வேண்டுமென்றால் இன்றிலிருந்தாவது உங்கள் முயற்சியைத் தொடங்குங்கள். இதற்கான பலனைத் தேர்வு முடிவுகள் உங்களுக்குச் சொல்லும். கடவுள் மீது நம்பிக்கை வையுங்கள். எந்த அளவுக்கு உழைக்கிறோமோ, அந்த அளவுக்கு கடவுளின் கருணை கிடைக்கும் என்கிற சித்தாந்தத்தை நம்புகிறவள் நான். ஒரு பழமொழிகூட உண்டு... 'உங்கள் மனமும் ஆன்மாவும் எதை நோக்கிச் செல்கிறதோ,

அதை நீங்கள் கட்டாயம் அடைவீர்கள்' என்று. அதுதான் என் வாழ்க்கையிலும் நடந்தது.

என் அப்பா ஐ.ஐ.டி.யில் படித்தவர். எனக்கும் ஐ.ஐ.டி. ஆசை வந்தது. அதற்கான கோச்சிங் க்ளாஸ் போக ஆரம்பித்தேன். ஆனால் ஐ.ஐ.டி.யில் படிக்க ஆசைப்படுகிறவர்கள், அதற்கான ஏற்பாடுகளை ஒன்பதாம் வகுப்பிலிருந்து ஆரம்பிக்க வேண்டுமாம். ப்ளஸ்டு கூட சி.பி.எஸ்.ஈ. சிலபஸில் படித்தால்தான் சுலபமாகத் தேர்வாக முடியும். இதனால் ஸ்கூலுக்கும் கோச்சிங் க்ளாஸுக்கும் இடையே சமாளிக்க முடியாமல் திணறினேன். பள்ளித் தேர்வுகளில் மதிப்பெண்கள் இறங்க ஆரம்பித்தன. எனக்கு மிக ஏமாற்றம். 'ஐ.ஐ.டி.யில் படிக்க ஆசைப்படுவது தவறா?' என்று மனம் புழுங்கியது. என் ஆர்வலர்கள் கவுன்ஸெலிங் கொடுத்தார்கள். மனமாற்றம் அடைந்தேன். ஐ.ஐ.டி. ஆசையைக் கை கழுவினேன். முழுக்க ஸ்டேட் போர்டுக்கு மட்டும் என்னைத் தயார்ப் படுத்தினேன். கடைசியில் என் தேர்வு முடிவுகள் சொன்னது இதுதான்: 'ஒன்றே செய். அதை நன்றே செய்.'

'ஒரே கனா என் வாழ்விலே' என்று பாடும் வாய்ப்பு எனக்கு அந்த வருடம் கிடைத்தது. எந்த மேடையைப் பார்த்து வியந்தேனோ, அதே பள்ளி மேடையில் 'மாநிலத்தின் முதல் மாணவி' என்கிற பெருமையோடு நின்று என் ஜூனியர்ஸுக்கு அறிவுரை கூறினேன். ஆனால் எவ்வளவு சாதித்தாலும் ஒன்று மட்டும் உறுதி... 'நீங்கள் சிறந்தவராக இருக்கிறபோது ஒன்றை ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். இந்த உலகத்தில் ஒரு மனிதனாவது உங்களைவிட கூடுதல் திறமைசாலியாக இருக்கக்கூடும்.' இதுதான் என்னை வழிநடத்துகிறது.

- ச.ந.கண்ணன்

சுத்தமான தமிழ்ப் பெயரைக் கொண்ட பாரதி, ஒரு தெலுங்குப் பெண். 1188 மதிப்பெண்கள் எடுத்து 2003-ஆம் வருட ப்ளஸ்டு தேர்வில் முதல் இடத்தைப் பிடித்தவர். இப்போது ராஜஸ்தானிலுள்ள பிட்ஸ் பிலானியில் பி.ஈ. கம்ப்யூட்டர் சயின்ஸ் இறுதி வருடம் படித்து வருகிறார். தற்சமயம் யாஹூவில் ப்ராஜக்ட் செய்து வரும் பாரதிக்கு, படிப்பு முடியும் முன்பே பில் கேட்ஸின் மைக்ரோசாஃப்ட் கம்பெனியில் வேலை கிடைத்திருக்கிறது.

# பாரதி

சிறுகதை

# ஆட்டோ மாமா!

விஜயாலயன்

ஆட்டோவைக் கைகாட்டி நிறுத்தச் சொன்னாள் கங்கா. ரோட்டின் ஓரமாய் நிறுத்தினான் முத்துராஜா. கங்கா ஆட்டோவை நெருங்கினாள்.

"அக்கா...! நீயா...? மச்சானுக்கு நெஞ்சு வலின்னு காலைல ஆஸ்பத்திரிக்குக் கூட்டிட்டுப் போனியே? என்னாச்சுக்கா...?"

"உங்க மச்சானுக்கு வலது பக்க மார் புல ஏதோ அடைப்பு இருக்காம்! பத்து நாள் கழிச்சு ஆபரேஷன் பண்ணணுமாம்! இல்லேன்னா... உயிருக்கே ஆபத்தாம்!'' கங்கா அழத் தொடங்கினாள்.

''ஆபரேஷன் செலவு எவ்வளவு ஆகும்க்கா...?"

"ஒரு லட்சம் ரூபா செலவாகுமாண்டா. டாக்டர் 'ஒரு அறுபதாயிரம் மட்டும் கட்டு. நல்லவிதமா ஆபரேஷன் பண்ணிடலாம்'ன்னு சொன்னாருடா... அதாண்டா உன்னத் தேடிட்டு வந்தேன்!"

"எங்க மொதலாளி கிட்டே பத்தாயிரம் கூட வாங்க முடியாது. சரியான கறார் பேர்வழி..."

அப்பொழுதுதான் ஆட்டோவுக்குள் பார்த்தான் கங்கா. கான்வென்ட் டிரஸ் அணிந்து, டைகட்டி இருந்தான் ஐந்து வயது சுரேஷ். அவன் அருகே புத்தகப்பை. சடாரென்று அவளுக்கொரு யோசனை.

"டேய் முத்து...ஆட்டோவுக்குள்ளே உக்காந்திருக்கானே... இந்தப் பையனோட அம்மாவும் அப்பாவும் நல்ல வசதியான வங்கதானே?"

"ஆமாக்கா..."

"டேய்... நான் ஒரு ஒண்ணு சொல லட்டுமா... இந்தப் பையனைக் கடத்தினா என்ன...?"

கேட்டதும் விழி பிதுங்கிப் போனான் முத்துராஜா.

ஆனால் தொடர்ந்த அக்காவின் அழுகையும், மச்சானின் வளர்த்த பாசமும் அவனைத் தடுமாற வைத்தன.

"அதுக்கில்லக்கா... இது ரொம்ப ரிஸ்க். மாட்டினா... மூணு வருஷம்... நாலு வருஷம்னு இட்டிருவாங்க...!

"இதப் பாருடா, ஊர் தாண்டி மூணு கிலோமீட்டர் தள்ளி இருக்கிற காட்டு பங்களாவுல இந்தப் பையனை ஒரு ரெண்டு நாளைக்கு ஒளிச்சு வெச்சா... யாருக்கும் எந்தச் சந்தேகமும் வராது. இந்தப் பையனோட அப்பாகிட்டே பணத்தை வாங்கிட்டு ஒதுங்கிக்குவோம்... என்னடா சொல்ற...?"

வியர்த்து ஒழுகியது முத்துராஜாவுக்கு.

"உன்னோட தோஸ்த் காளியையும் துணைக்கு வெச்சுக்க. அவங்கிட்டே செல்ஃபோன்கூட இருக்கு... சரியா...?"

"ச...சரிக்கா...!"

அரை மனதோடும் கலவரத்தோடும் தலையாட்டினான்.

ஆறு மாதங்களுக்கு முன்...

ஆட்டோ சவாரி போய்விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தான் முத்துராஜா.

ரோட்டோரம் ஒரு காரைச் சுற்றி ஏழெட்டு ஆட்டோக்கள் சூழ்ந்திருந்தன.

கூட்டத்தை விலக்கிக்கொண்டு உள்ளே நுழைந்தான். கார்க்காரர் பரிதாபமாய் நின்றிருந்தார். விசாரித்தான்.

கார்க்காரர் அஜாக்ரதையாய் ஓர் ஆட்டோவில் முட்டிவிட, ஹெட்லைட் உடைந்து முன்பக்கம் கொஞ்சம் ஒடுங்கிப் போயிருந்தது.

முத்துராஜா இரு பக்கமும் பிரச்னை பெரிதாகாமல் பேசி.. நானூறு ரூபாயை கார்க்காரரிடமிருந்து ஆட்டோக்காரருக்கு

வாங்கிக் கொடுத்தான்.

கார் ஓனர் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டு அவனிடம் நன்றியோடு பேசினார்.

"தம்பி, நானும் என் மனைவியும் பேங்க்ல வேலை பாக்கறோம். எங்களுக்கு ராஜேஷ்ன்னு அஞ்சு வயசுல பையன். கான்வென்ட்ல படிக்கறான். உனக்கு ஆட்சேபனை இல்லேன்னா... எம் மகனை தினமும் நீ கொண்டு போய் விட்டுட்டு கூட்டிட்டு வா... தகுந்த சம்பளம் தரேன்" என்றார்.

அவர்தான் அக்கா கடத்தச் சொன்ன ராஜேஷின் அப்பா. இந்த ஆறு மாத காலமாய் ராஜேஷ், 'ஆட்டோ மாமா... ஆட்டோ மாமா...' என்று இவனிடம் ஒட்டிக் கொண்டு விட்டான்.

'என் மேல் பாசம் கொண்டவர்களுக்குத் துரோகம் செய்யச் சொல்கிறாளே அக்கா?' வேறு வழியில்லை என்று முடிவெடுத்தான். வளர்த்த பாசம் அவனை ஆட்டி வைத்தது.

ஆட்டோ டவுனை விட்டு இரண்டு கிலோமீட்டர் தூரம் தாண்டியிருந்தது.

அப்போது ஆட்டோவைத் தாண்டி ஒரு பைக் வேகமாகப் போனது. போன வேகத்திலேயே திரும்பி வந்து குறுக்கே நின்றது.

பிரேக் போட்டு நிமிர்ந்த முத்துராஜா வெலவெலத்துப் போனான்.

ஏரியா சப்-இன்ஸ்பெக்டர்!

"படிக்கற கொழந்தையைக் கூட்டிட்டுக் காட்டுப் பக்கம் எங்கடா போறே...?"

"சார்...! அது... வந்து..." - வியர்வை பொங்கியது.

"இறங்குடா... கீழே..."

"சார்... இந்தக் கொழந்தைய நான்தான் ஸ்கூலுக்குக் கூட்டிட்டுப் போறேன் சார்."

"பொய்யாடா சொல்ற...?" - ஓங்கி அறைந்தார் சப்-இன்ஸ்பெக்டர்.

ஆட்டோவை விட்டுக் கீழே இறங்கி ஓடி

வந்தான் ராஜேஷ்.

"போலீஸ் மாமா... இவரு எங்க ஆட்டோ டிரைவர்தான். அவர் சொன்னது உண்மை. அவர்தான் தினமும் என்னை ஸ்கூலுக்குக் கூட்டிட்டுப் போறாரு...!"

"சரி... இந்தக் காட்டுப் பக்கம் எதுக்குக் கூட்டிட்டுப் போறான்?"

"எங்க மிஸ் நாளைக்கு இயற்கை அழகுன்னு ஒரு கட்டுரை எழுதச் சொன்னாங்க. அதை ஆட்டோ மாமாகிட்டே சொன்னேன். அதுக்கு ஆட்டோ மாமா 'நான் படிக்காதவன். உன்னைக் காட்டுப்பக்கம் கூட்டிட்டுப் போயி காட்டறேன். நீயே பாத்துட்டுப் போயி எழுது'ன்னு இங்க கூட்டிட்டு வந்தாரு...!"

சப்-இன்ஸ்பெக்டர், முத்துராஜாவிடம் திரும்பி, "இதப் பாரு... உன்னோட ஆட்டோ நம்பரைக் குறிச்சுக்கிட்டேன். ஏதாவது தப்பு பண்ணினே... எலும்பை எண்ணிடுவேன்... ஜாக்கிரதை...!" என்று சொல்லி விட்டு பைக்கில் ஏறிப் பறந்தார்.

ராஜேஷ், முத்துராஜாவை அண்ணாந்து கேட்டான்.

"ஏன் ஆட்டோ மாமா...? போலீஸ் மாமா சொல்றதைப் போல... என்னைக் கடத்திட்டுப் போறீங்களா...?"

"இ...இல்ல... ராஜேஷ்!"

"என்னை உங்களுக்குப் பிடிக்கலையா... ஆட்டோ மாமா?"

அழுகை பொங்கிக்கொண்டு வர, ராஜேஷைத் தூக்கிக்கொண்டான் முத்துராஜா.

டவுனுக்குள் நுழைந்து ஒரு ரூபாய் போனில் காளியைப் பிடித்து அக்காவிடம் பேசினான்.

"ஹலோ...! அக்கா, நான் முத்து பேசறேன். அந்தப் பையனைக் கடத்திட்டு வர முடியாதுக்கா...!"

"ஏண்டா...?"

"முடியாதுன்னா.... விட்டுடு...!"

"அப்போ.. உம் மச்சானோட உசிரு முக்கியமில்லையா...?"

"உன்னோட மாங்கல்ய பலம் கெட்டியா இருந்தா... மச்சான் கண்டிப்பா பொழைச்சுக்குவாரு...!"

கோபமாய்க் கத்தினாள் கங்கா.

"நன்றி கெட்ட நாயே...!"

"அக்கா! நான் நன்றிவுள்ளவனா... இல்லாதவனான்னு எம் மனசாட்சி சொல்லிடுச்சு! இனிமே என்னை உன்னோட வீட்டுக்குள்ள விடமாட்டேன்னு எனக்குத் தெரியும். என்னை மன்னிச்சிடுக்கா..." - ரிசீவரை வைத்துவிட்டுத் திரும்பினான்.

எதிரேயிருந்த ஐஸ்கிரீம் கடையிலிருந்து ஓடி வந்தான் ராஜேஷ். இரண்டு கைகளிலும் கோன் ஐஸ்கிரீம்.

"இந்தா... ஆட்டோ மாமா...! உனக்கு ஒண்ணு... எனக்கு ஒண்ணு!"

நாக்கின் நுனியில் அந்த வெண்ணிலா ஐஸ்க்ரீமை எடுத்துத் தொண்டைக்குள் பரப்பினான்.

ராஜேஷின் சிரிப்பைப் போல் இனிமையாய் இருந்தது! ○



"அந்த மெகா சீரியல் டைரக்டர் இப்படிக் குடுகுடு கிழவனா இருக்காரே..."

"சீரியல் ஆரம்பிக்கறப்ப அவரு சின்னப் பையனாத்தாங்க இருந்தாரு!"

- தஞ்சை அனார்கலி

# நாடகம்

# உயிரின் மதிப்பு!

கூத்துப்பட்டறைக் குழுவினர் கடந்த வாரம் புதிய நாடகமொன்றை அரங்கேற்றினர் - 'நாரை சொன்ன கதை' என்கிற தலைப்பில். இடம், சென்னை சின்மையா நகரிலுள்ள கூத்துப்பட்டறை வளாகம்.

ஓர் அழகான மேசை. சுற்றிலும் கதை சொல்லிகள். அத்தனை பேரும் சுவாரஸ்யமில்லாமல் இருக்க, நாரை என்பவர் கதை சொல்கிறார். அதுவும் நிகழ்வுகளே இல்லாத கதை.

ஒரு கதையை எடுத்து அப்படியே நாடகமாக மாற்றுவதெல்லாம் பழைய விஷயம். இந்த நாடகம் கொஞ்சம் புதுசு.

எழுத்தாளர் காஞ்சனா தாமோதரன் எழுதிய மூன்று கதைகளை ஒரே நேர்க்கோட்டில் அமைத்து, 'கதையே மாறிப்போச்சு' என்றெல்லாம் யாரும் சொல்லிவிட முடியாதபடி நாடகத்துக்கு மெருகூட்டியிருந்தார் கூத்துப் பட்டறை ந.முத்துசாமி.

இவர்களின் அடையாளம், பரீட் சார்த்தமான நாடகங்கள் மட்டுமல்ல... கலை மற்றும் பண்பாடு சார்ந்த விழிப் புணர்வை ஏற்படுத்துவதும்தான். இசை, நடனம், நடிப்பு என்று பல்வேறு விஷயங்களில் கவனம் செலுத்தி வருபவர்களின் மற்றுமொரு சோதனை முயற்சியாகத்தான் இந்நாடகம் தென்பட்டது.

நாரை கதை சொல்லிக் கொண்டிருக்கும்போதே, அவரே உருவாக்கிய சில கதாபாத்திரங்கள் அவரைக் கதை சொல்லவிடாமல் தடுத்து, தங்களுடைய நியாயங்களைப் பேசுகின்றன. ஓர் உயிரின் மதிப்பை நமக்கு உணர்த்துவதுதான் நாடகத்தின் ஆதார கருதி.



* நாடகத்தில் ஒரு காட்சி...

ஒரு கதையைச் சொல்லிக் கொண்டிருக்கும்போதே இன்னொரு கதைக்குள் போகலாம். அங்கிருந்து அப்படியே அடுத்து ஒரு கதைக்குள் போய்விட்டு வரலாம். நினைத்தபோது அடுத்தடுத்த கதைகளுக்குத் தாவிச் செல்லலாம்.

நவீன நாடகங்களில்தான் இதெல்லாம் சாத்தியம். எளிமையான காட்சி அமைப்புகள், மிதமான ஒளி, மைக் இல்லாமல் உரத்த குரலில் பேசும் நடிகர்கள் - எல்லாம் சேர்ந்து நாமும் அந்த நாடகத்தில் ஒரு பகுதியாகவே மாறிவிடுவது நிச்சயம்.

- முத்துராமன்

# டிஷ்யூம்

என்னுடைய முதல் படத்தில் நான் நடித்த சண்டைக் காட்சிகளைப் பார்த்தவர்கள் பாராட்டினார்கள். குறிப்பாக அப்படத்தின் ஸ்டண்ட் மாஸ்டர் ஜீவா. நான் என்னுடைய குங்ஃபூ மாஸ்டர் சேகருக்கு மானசீகமாக நன்றி தெரிவித்தேன். காரணம், குங்ஃபூ கற்றுக்கொள்ள ஆரம்பித்தபோது உடம்பு வலி ஏற்பட்டதால் நான் குங்ஃபூ கிளாசுக்குப் போக மாட்டேன் என்று சொன்னபோது, என் மனத்தை மாற்றி, குங்ஃபூ மீது ஆர்வம் ஏற்படுத்தியவர் அவர்தான்.

சினிமாவில் நடிக்க வந்த பிறகு கற்றுக்கொண்ட ஒரு விஷயம் குதிரை சவாரி. அதற்காக ஸ்டண்ட் மாஸ்டர், மெரினா பீச்சில் ஒரு குதிரையையும் ஏற்பாடு செய்தார். அதிகாலையில் எழுந்து ஒரு கம்பீரமான குதிரையில் சவாரி பழகப் போகும் கனவுடன் காரில் போய் மெரினாவில் இறங்கினேன். அந்த மாதிரி ஒரு குதிரையை உலகத்தில் வேறு எங்காவது பார்க்க முடியுமா என்பது சந்தேகம்தான்! வத்தலும், தொத்தலுமாக ஒரு ஜீவன் எங்களை நோக்கி நடந்து வந்தது. "நான் இதில் ஏறி உட்கார்ந்தால், குதிரை நாலு அடி எடுத்து வெச்சதுமே, சுருண்டு விழுந்துடும்போல இருக்கே!" என்றேன். "குதிரை பார்க்கத்தான் இப்படி இருக்குது. சவாரி பண்ணும்போது பாருங்களேன்" என்றார் குதிரைக்காரர்.

எனக்கு உள்ளூர பயமாகத்தான் இருந்தது. 'குதிரை திடீரென்று பாய்ந்து ஓட ஆரம்பித்து விட்டால், அதை எப்படிக் கட்டுப்பாட்டுக்குக் கொண்டு வருவது?' என்று குதிரைக்காரரிடம் கேட்டேன். "நம்ம குதிரை அப்படியெல்லாம் ஒண்ணும் பண்ணாது; பயப்படாதீங்க; சும்மா உட்காருங்க" என்று சொன்னார். ஏறி உட்கார்ந்து கொண்டதும் "தம்பி! இலேசா நீங்க கையில பிடிச்சிருக்கிற லகானை இழுங்க!" என்றார் குதிரைக்காரர். லகானை நான் இலேசாக இழுத்தேன். குதிரை நகரவில்லை. அடுத்து, கொஞ்சம் வேகமாக இழுத்தேன். குதிரைக்காரரும் குதிரையின் வால் பகுதியில் இலேசாக ஒரு தட்டு தட்டினார். குதிரை நகர ஆரம்பித்தது. கொஞ்சம் கொஞ்சமாக குதிரை வேகம் பிடிக்கும் என்று எதிர்பார்த்துக் காத்திருந்தேன். ஆனால், குதிரை பாட்டுக்கு ஜாலியாக நடந்து கொண்டிருந்தது.

நார்மலாக குதிரை என்றால் ஓட வேண்டாமா? ஆனால் இந்தக் குதிரைக்கு ஓட்டம் என்றாலே என்னவென்று தெரியாது போலும்! குறிப்பிட்ட தூரம் வரை சென்றதும், அந்தக் குதிரை தானாகவே திரும்பியது. அப்புறம்தான் எனக்கு விஷயம் புரிந்தது. அந்தக் குதிரை மாலை நேரங்களில் பீச்சுக்கு வருகிறவர்களை ஏற்றிக்கொண்டு சவாரி செல்லும் குதிரை. ஆள் ஏறி உட்கார்ந்ததும், மெதுவாக நடந்து மெரீனாவில் ஒரு பெரிய ரவுண்டு சுற்றிவிட்டுப் புறப்பட்ட இடத்துக்கே வருவதற்குப் பழகிய குதிரை. அதனால்தான் அது தானாகவே திரும்பிவிட்டது. முதல்நாள் குதிரை சவாரி முடிந்து புறப்படுகிறபோது குதிரைக்காரரிடம், "நாளைக்கு வேற நல்ல குதிரை கொண்டு வாங்க" என்றேன். குதிரை தலையை ஆட்டியது. ஆனால் அந்தக் குதிரைக்காரரிடமிருந்து பதில் இல்லை!

ஒருநாள் எனக்கு மிகவும் கடுப்பாகி விட்டது. குதிரைக்காரரிடம் 'நீங்க என்ன செய்வீங்களோ எனக்குத் தெரியாது. இன்னிக்கு, நான் குதிரையில் வேகமாக சவாரி செய்யணும்" என்றேன். குதிரையில் ஏறி உட்கார்ந்தேன். குதிரைக்காரர் என்ன செய்தாரோ தெரியவில்லை. குதிரை திடீரென்று ஒரு தாவு தாவியது. அதை நான் சற்றும் எதிர்பார்க்கவில்லை. 'பொத்'தென்று குதிரை மேலேயிருந்து கீழே விழுந்தேன். குதிரை இலேசாகக் கனைத்தது. 'இத்தோட போதுமா? இன்னும் ஒருதடவை வேணுமா?' என்று கேட்பதைப்போல இருந்தது அந்தக் கனைப்பு!

முதல் படத்தின் ஷூட்டிங்கின் போது எனக்கும் டைரக்டருக்கும் அடிக்கடி மோதல்கள் வரும். காரணம், ஏற்கெனவே சொன்னதைப்போல, நான்

4

## ஆக்‌ஷன் ஸ்டார் ஜீவா

# டைரக்டருடன் நடந்த சண்டை!

சினிமாவில் நடிக்க வேண்டும் என்று நினைத்ததே இல்லை. என் ஆர்வம் சினிமாவின் தொழில்நுட்ப சமாசாரங்களைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்பதுதான். ஆகவேதான், நான் பள்ளிக்கூடப் படிப்பை முடித்துவிட்டு, கம்ப்யூட்டர் கோர்ஸ் சேர்ந்தேன். அடிப்படையான விஷயங்களைக் கற்றுக்கொண்ட பிறகு, மல்டிமீடியா தொழில்நுட்ப வகுப்பில் சேர்ந்தேன். அங்கே நான் ஆர்வம் காட்டியவை அனிமேஷனும் வெப் டிசைனிங்கும். அதன் தொடர்ச்சியாகத்தான் நான் கனடாவில் மேற்கொண்டு படிக்க விண்ணப்பித்தேன். ஆனால், அங்கே அட்மிஷன் கிடைத்து கனடா போவதற்குள்ளே நான் நடிகனாக்கப்பட்டு விட்டேன். முதல் படத்தின் ஷூட்டிங்கில் டைரக்டருடன் நடந்த மோதல்களைப் பற்றி நினைக்கிறபோது, நான் கொஞ்சம் ஓவராக நடந்துகொண்டு விட்டதாகவே நினைக்கிறேன்.

(பேசலாம்)

# போட்டி முடிவு

**கல்கி 17.12.2006 இதழின் டயலாக் எழுதுங்க போட்டியில் பங்குபெற்று சிறப்பான டயலாக்கை எழுதி தலா ரூ.250/- பரிசு பெறும் எட்டு வாசகர்கள்.**

"அபிராமி, கோடிக்கணக்கான பணத்தை எண்ணிய, கை, இப்போ கம்பி எண்றது பாத்தியா?"

"அபி, நீ என்ன யோக்யம்! நீ, உன் ரோலில் நடிக்கனும்பா!"

"அங்கேயும் உன்னை அழ வைக்க இந்த 'அபிராமி' வருவா; ஜாக்கிரதை!"

**- கே.மோகனசுந்தரம், பாளையங்கோட்டை**

"என்னைத்தான் வெளியில தொரத்திட்டாங்க. நீங்களாவது புத்திசாலித்தனமா பொழச்சுக்கங்க..."

"என்ன சொல்றீங்க?"

"புழல் சிறையில் நல்ல வசதியாம். அங்க போறதுக்கு அப்ளிகேஷன் போட்டு வைங்க!"

**- அனார்கலி, தஞ்சாவூர்**

"மிஸ் பண்ணிட்டேன், அபிராமி. அநியாயத்துக்கு மிஸ் பண்ணிட்டேன். எனக்குக் கொடுப்பினையே இல்லே."

"அபிக்கா... என்னாச்சு உங்களுக்கு? நீங்கதான் இப்ப ரிலீஸ் ஆயாச்சே. அப்புறம் ஏன் இந்த விரக்தி!"

"ஜெயில்ல இனிமேல் வாரம் ஒரு நாள் கோழிக் குழம்பாமே. கொடுத்து வச்சவ நீ...

**- கே.ஜி.எஸ்., திருநெல்வேலி**



## புழல் சிறை ஜூப்பர்!

அம்மா, ஆர்த்தி யாருமே புருஷனோட வாழல்லியே."

**- எஸ்.சத்யசாந்தி, சென்னை**

"இந்த ஆதி பண்ற தொல்லை தாங்க முடியலை. அவனை அடக்க வழி சொல்லுங்க."

"அடிப்பாவி... அவன் உன் தம்பிடி! நாளைக்கு உனக்கு சீமந்தம் செய்ய வருவான் பாருடி."

**- வே.சித்ரா, கும்மிடிப்பூண்டி**

"சே! அழுது அழுது ஒரே வெறுப்பாகிப் போச்சு! உடனே ஒரு நகைச்சுவை

"நீங்க எப்படி ஜெயிலுக்கு வந்தீங்க."

"பக்கத்து வீட்டு வாசல்ல போட்ட கோலத்தை,



ஆனந்தமா எங்கவீட்டு வாசல்ல போட்டேன். 'காப்பி ரைட்' தடுப்புச் சட்டப்படி வழக்கு போட்டு ஜெயில்ல தள்ளிட்டாங்க!''

- எஸ்.சில்வனை, கன்னியாகுமரி

''என்னாலதான் தொடர்ந்து சிறைச்சாலை சிக்கனைச் சாப்பிட முடியல. நீயாவது சாப்பிடக் கூடாதா அபிராமி? ஏன்... இப்படி சிக்கன் வேணாம்னு அடம்பிடிக்கிறே?''

''பிடிக்கல. எனக்குப் பிடிக்கல. சிக்கன் எனக்கு வேணாம்!''

- ராம்.ஆதிநாராயணன், தஞ்சாவூர்

''என்னை எல்லோரும் ஒன்று கூடி புதைச்சாங்க; நான் விதை என்பதை மறந்தாவங்க; மீண்டும் முளைச்சு வந்தேன்.''

''நான் 'லேட்டா' வந்தாலும் 'ஃபாஸ்ட்'டா வந்து 'கில்லி' மாதிரி 'கிள்ளி' எறிவேன்.''

- ஏ.மோகனசுவாமி, கொளத்தூர்



# பரிசு ரூ.2000/-

மார்ச் முதல் வாரம் ப்ளஸ்டூ மாணவர்கள் பொதுத் தேர்வு எழுதப் போகிறார்கள். பரீட்சைக்குத் தயாராகும் காலத்திலும் பரீட்சை நேரத்திலும் பின்பற்ற வேண்டிய ஆரோக்ய டிப்ஸ் ஐந்தினை அள்ளி வழங்குங்கள். சிறந்த டிப்ஸ் தரும் எட்டு நபர்களுக்குத் தலா ரூ.250 பரிசளிக்கப்படும்.

**கடைசி தேதி 5.2.2007.**

ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.

# சிறப்புச் சிறுகதை

## பிரபஞ்சன்

என் வாழ்க்கையை உங்கள் முன் நான் விரிக்கிறேன். நான் இன்று இப்படி இருப்பதற்கான வித்தை நீங்கள் கண்டு கொள்ள முடியும், சுலபமாக.

அரிசிப் பஞ்சம் கீழ்க்கோட்டு மக்களைத் துன்புறுத்திக் கொண்டிருந்த காலம். காங்கிரஸ் அரசாங்கத்துக்கு 'ஆறு அவுன்ஸ் அரிசி அரசு' என்ற பெயர் ஏற்பட்டிருந்த காலம். இந்தித் திணிப்பை எதிர்த்து இளம் தமிழர்களின் வெப்பம் கூடிக்கொண்டிருந்த காலம். அப்போதெல்லாம் டைப்ரைட்டிங், அரசு வேலைக்கான தகுதிகளில் ஒன்றாக இருந்தது. அதனால் நானும் சேர்ந்தேன். சின்னப் பாவாடையும் அதற்குத் தோதான தாவணிகளும் அணிந்த பெண்கள் விடியலிலேயே வெள்ளைத் தாள்களை ஒரு கோல் மாதிரி சுற்றிக் கொண்டு டைப் பயிற்சி அகத்துக்குப் போவதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களோ, என்னவோ; அந்தக் காலை வேளைகளில் பேப்பர் போடும் பையன்களும், உணவு விடுதிக்குப் பால் தருவதையே ஜீவிய நோக்கமாகக் கொண்டு பிறந்த எருமைகளும், பசுக்களும், வண்ணத் தாவணிப் பதினைந்து பிராயத்துப் பெண்களும் மற்றும் நானும் மட்டுமே தெருவை நிரப்பிக் கொண்டிருப்போம். முதல் இரண்டு நாட்கள் மிகவும் மங்களகரமாகவே பயிற்சி நடந்தது. என் இடப் பக்கத்தில் மோகனா; வலப்பக்கத்தில் அற்புதமேரி. என் முதல் பயிற்சியான எ.எஸ்.டி. எஃப். என்கிற எழுத்துகள் மாறி மாறி ஆங்கில எழுத்துகள் இருபத்தாறில் எது ஒன்றாகவும் வந்தது. அதைவிடவும் சோகம், சகலவிதமான பெருக்கல் முதலான குறிகளை எல்லாம் நான் டைப் செய்திருந்தேன்.

எங்கள் பயிற்சியாளர் பாலறாவாயர் விசித்திரமான தலையை உடையவர். முடியே இல்லாத தலையும், காது மடல்களில் அமர்ந்து வளர்ந்த முடியும் கொண்டவர். மல் துணியால் ஆன அரைக்கைச் சட்டையும், கசங்கிய கைலியுமாகவே இருப்பார். 'இது என்ன..?' என்று நான் டைப் அடித்த தாளைப் பரக்கெனக் கிழித்து என்னிடம் காட்டினார். மேற்படி அந்த எ.எஸ்.டி.எஃப். தவிர மற்ற எழுத்துகள் மிகத் தெளிவாக அடிக்கப்பட்டிருந்தன. என்னிடமிருந்து பார்வையை விலக்கி அற்புதமேரியைப் பார்த்தார். அவளோ, இந்த மண்ணுலகத்தின் மீது தானும் டைப்ரைட்டரும் அல்லாது வேறு எதுவும் இல்லை என்பதாக டைப் அடிப்பதில் மூழ்கி இருந்தாள்.

நடிப்பில் பத்மினியை வென்றுவிட்டாள்.

மறுநாள் முதல்கொண்டு எனக்கு 10 - 11 மணி ஒதுக்கப்பட்டது. அந்த நேரம் ஆண்கள் நேரம் போலும். வெல்லக் கடை பாட்சா, சொக்கலால் பீடியைத் தவிர வேறு எதுவும் மனிதனுக்கு ஆறுதல் தராது என்ற கொள்கைப் பிடிப்பில் இருந்த மணிவாசகம் மற்றும் நான். பயிற்சி நிலையம் முழுக்க ஆண்வாடை வீசியது. தெருவைப் பார்த்த மாடி ஜன்னல் முன்னால் என் டைப்ரைட்டர். எனக்கு நேர் எதிரே, எதிர்வீட்டு மொட்டை மாடி. நான் பாடத்தில் மிக வேகமாக முன்னேறிக் கொண்டிருந்தேன். ஒரு வாரம் போயிருக்கும். திடுமென ஒரு நாள், மாடியில் ஒற்றைத் கதவைத் திறந்து கொண்டு ஒருத்தி தோன்றினாள். என் வயதுதான் இருக்கும். குளித்து வந்தவளாக இருந்தாள். தோளில் போட்டுவந்த துண்டால் தலையைத் துவட்டலானாள். தலை துவட்டலில் ஏகப்பட்ட ஜதிகள் அல்லது நடைகள் இருப்பதை அப்போதுதான் நான் அறிந்தேன்.

நீங்கள் சிரிக்கிறீர்கள் அம்மணி. அனுபவங்கள் மனிதனுக்கு எப்படியும் எங்கிருந்தும் நேரலாம் என்பதுதான் இதன் தத்துவம். துண்டினால் முதலில் உச்சந்தலையில் அழுந்தத் தேய்த்து ஈரத்தைப் போக்கிக் கொள்வது. அப்புறம் இரண்டு பக்கவாட்டுக் கூந்தலையும் துவட்டுவது. அப்புறம் லாட வடிவில் குனிந்து, கூந்தலை முன்புறம் கறுப்பு அருவி மாதிரித் தொங்கவிட்டுச் சுருட்டிய துண்டால் அடிப்பது. (அப்படி அடிக்கும்போது கொசுக் கூட்டம் மாதிரி தண்ணீர் திவலைகள் பறக்கும்.) பிறகு, கூந்தலை அதன் யதாஸ்தானத்தில் இருக்கும்படிச் செய்து, வெயிலில் சற்றே உலவி உலர்த்துவது. அப்புறம், அதை இரண்டாகப் பிரித்து, தோள்களின் இருபுறமும் விரித்துப் போட்டு உலர வைப்பது. ஏழு நாட்கள் நான் இந்த வேடிக்கையைப் பார்த்தேன். விருப்பப்பட்டுப் பார்த்தேன் என்று சொல்ல முடியாது. என் விழித் திரையில் அக் காட்சிகள் விழுந்தன.

என்னைப் பொருத்த அளவில் நான் என் கண் கதவுகளைத் திறந்து வைத்தேன். அவ்வளவுதான். காற்றில் கட்சிக் கொடித் துணியைப்போல பறந்த அந்தக் கருங்கூந்தல், விரிந்து பரவி என்னை, என் அச்சு எந்திரத்தைச் சுற்றிப் பொட்டலமாகக் கட்டியது என்னவோ உண்மை. என்னை எதுவோ ஸ்தம்பிக்கச் செய்தது. அந்த 'எது' எது? அகமா, புறமா? என் ரசாயனத்தைக் கிளறச் செய்த பௌதிகம் எது? விடை காணும்முன்பே, நான் பயிற்சிக் கூடத்தை விட்டு வெளியேற்றப் பட்டேன். இதைத்தான் நாம் அவசர உலகம் என்கிறோம் போலும்.

போகட்டும். கூந்தல் உலர்த்திய அந்த மாடி மங்கை, எப்போதோ உள்ளே போய் விட்டிருப்பாள். அவளது ஈரம் உலர்ந்து போயிருக்கும். ஆனால் கூந்தல் மட்டும் என்னைப் பின்பற்றி வந்துகொண்டிருந்தது.

நான் தமிழ் படிக்க காவிரி ஓர ஊருக்குப் போனேன். வெண்ணாற்றிலும், வெட்டாற்றிலும் காவிரி பொங்கிப் பிரவாகம் எடுத்து ஓடிக் கொண்டிருந்தது. மனிதர்கள் மனசில் ஈரம் இருந்தது. நான் உட்காரும்படி நேர்ந்தது. ஜன்னலைத் தாண்டி வெட்டாறு ஓடியது. என் எதிரே படித்துறை. அதுவும் மதியம் பதினொரு மணி முதல் மாலை வரைக்கும் பெண்களால் எடுத்துக் கொள்ளப்படும் படித்துறை. பதினொரு மணிக்குத்தான் எனக்குப் பவணந்தியின் வருகை நேரம். பாடம் நடத்தியவர் மகத்தான அறிஞர் இலக்கணப் பேரறிஞர். எல்லாவற்றையும்விட மகத்தானவர்களாக இருந்தவர்கள், சரியாகப் பவணந்தி வரும் நேரம் பார்த்துத்தான் குளிக்க வந்தார்கள். குளிப்பது என்பது ஒரு கொண்டாட்டம். ஒரு தண்ணீர்த் திருவிழா. களிப்பூட்டிக் கொள்ள எடுக்கும் ஸ்நான சிலாக்கியம். வெட்டாற்றில், விரித்த பழுப்புக் காகிதம் போன்ற நீர் விரிப்பில், படிந்து தம் கூந்தலைப் படரவிட்டு முடி முனைகளைக் கூரிய எழுதுகோல்களாகக்

# தலைக்கு மேலானது...

கொண்டு குளிப்பவர்கள் எழுதிக் காட்டிய சொற்களே எனக்கானவையாக எனக்குத் தோன்றின. நதியின் சமப்பரப்பில் படுத்துக் கால்நீட்டி விச்ராந்தி செய்துகொண்ட கூந்தல் பலகைகள் மேல், நான் கவிதைகள் எழுதினேன் என்றால் அது கற்பனையே அல்ல; உண்மை. ஆற்றின் மேல்பரப்பில் பரவிய கூந்தல், பல்கிப் பரவிப் பார்த்து என் ஜன்னல், ஜன்னல் கம்பி வழி புகுந்து என் மேசை மேல் கவிந்து, பவணந்தி முகத்தில் மெழுகியது. பவணந்தியைக் கூந்தல்கள் தற்காலிகமாக வென்றாலும், தேர்வுகளில் பவணந்தியின் மேல் தான் வினாக்கள் கேட்டார்களே தவிர, கூந்தல்களைப் பற்றி அல்ல.

சிரிக்கிறீர்கள் அம்மணி. கூந்தல், ஒரு வால் போலும், சாட்டை போலும், கயிறு போலும் வளர்ந்து என் வாழ்க்கையைத் தொடர்ந்து வந்து என்னைச் சோதிப்பதும், தொந்தரவுக்குள்ளாவதுமாக இருந்தால், அற்ப மனிதன் என்னதான் செய்யக்கூடும்? முடிகளுக்கு முன், அவற்றின் அதிகாரத்துக்கு முன்னால், சாமான்யர் ஏது செய்யக்கூடும். சவரம் செய்து கொள்ளும் போது கன்னத்தை வெட்டிக் கொள்கிறவரும், பேருந்துகளில் மணிபர்சைப் பறிகொடுப்பவரும், மனைவியோடு சிரித்துப் பேசாதவரும் போன்ற ஆசாமிகளின் மனோபாவத்தோடு கூடிய மானேஜர்களுக்கு முன்னால் நிற்கும் ஏழைக் குமாஸ்தா நான்.

**"மூர்த்தி, நீங்கள் என்னைக் காதலிக்கிறீர்களா?"**

கேளுங்கள் அம்மணி. எனக்கும் நண்பர் பிச்சுமணிக்கும் சமஸ்கிருதம் கற்றுக் கொள்ள வேண்டும் என்ற விருப்பு ஏற்பட, வெண்ணாற்றங்கரையில் வீடு வைத்திருக்கும் லட்சுமணாச்சார் சுவாமிகளிடம் சிஷ்யர்களாகச் சேர்ந்தோம், காலை ஆறு மணிக்கு. நாங்கள் சைக்கிளில் சுவாமி வீட்டுக்குக் காலை ஐந்து மணிக்குப் புறப்படுவோம். அதற்குள் ராயர் கடை திறந்து விடும். இந்த ஊருக்கே உரிய டிகிரி காபி எங்களுக்குத் தயாராகிவிடும். அசல் காபி என்றால் எது என்பதை அக் காலத்தில் தான் நான் அறிந்தேன். அதுவரை நான் குடித்துக் கொண்டிருந்த திரவ பதார்த்தம், காபி என்ற கள்ளப் பெயர் கொண்டிருந்த மாரீசச் சமாச்சாரம் என்பது தெரிந்தது. எங்கள் சுவாமி ஒரு நல்ல காபிப் பிரியர். அவர் சொல்லுவார். தேவாள் எல்லாம் மனிதர்களாக, அவதாரங்களாகப் பூமியில் பிறக்க நேரும்போது, பூலோகத்தில் அமுதம் இல்லையே பிரபுவே என்று பகவான் மகா விஷ்ணுவிடம் முறையிட, அதனால் என்ன, டிகிரி காபி இருக்கிறதே என்றாராம் பகவான்... சொல்லுவார் சுவாமி!



தன்னைக் கழுவிக் கொள்ளும் காலை மிக ரம்யமாக இருக்கும். நாங்கள் சைக்கிளைக் கமுகு மரத்துக்குக் கீழே நிறுத்தி ஸ்டாண்டு போடும் அதே நேரம், சப்தம் கேட்டு வாசலுக்கு வருவாள் கோதை. சுவாமியின் குலக்கொடி. அப்போதுதான் ஸ்நானம் செய்து, உலராத கூந்தலை விரித்து, கால்வாய்களைப் போல் பரப்பி விட்டுக் கொண்டு, பூமிக்குள் இருந்து பிளந்துகொண்டு தோன்றுவாள். பூமி என்று சொல்லக் கூடாது. அழுக்கு பட்டாலும் படும். கடலில் இருந்து எழுந்து






## எங்கே அவர்கள்?

கல்கியில் தொடராக வந்த பேராசிரியர் கு.ஞான சம்பந்தனின் 'சினிமாவுக்குப் போகலாம் வாங்க' புத்தக வெளியீட்டு விழா அண்மையில் சென்னை பாரதியார் நினைவு இல்லத்தில் நடைபெற்றது. விழாவுக்கு வந்திருந்த பலரும் ஆவலாகத் தேடியது, தொடரில் பிரதான பாத்திரங்களாக வந்த முத்துராக்கையும் சினிமா மணியையும்தான்! வாழ்த்துரை வழங்கிய முனைவர் சுந்தர ஆவுடையப்பன்,

"இங்கு குவிந்துள்ள பலரும் முத்துராக்கு மற்றும் சினிமா மணியின் ரசிகர்கள்தான். அவர்களைப் பார்ப்பதற்காகவே வந்திருப்போரும் உண்டு. ஓர் உண்மை தெரியுமா? அந்த இரண்டு பேரும் வேறு யாருமல்ல- நூலாசிரியர் கு.ஞானசம்பந்தமேதான்! தமக்குத் தெரிந்த பல விஷயங்களை, தமக்கு ஏற்பட்ட பல அனுபவங்களைத் தன்மை ஒருமையிலேயே சொல்லிக்கொண்டு போகாமல், வேறு இரு பாத்திரங்கள் மூலமாகவும் பகிர்ந்தளித்ததற்கு அவருடைய தன்னடக்கமும் எளிமையும்தான் காரணம்" என்றார்.

அடுத்து பேச வந்த நடிகர் கமல்ஹாசன், "சுந்தர ஆவுடையப்பன் கூறுவதுபோல் ஞானசம்பந்தன் அவையடக்கம் கருதி அப்பாத்திரங்களைப் படைத்ததாக நான் நம்பவில்லை... அந்தப் பாத்திரங்களை உருவாக்கிப் பேச வைத்தது ஓர் அழகான யுக்தி" என்று பாராட்டினார்.

எழுத்தாளர் சுஜாதா, கவிஞர் வைரமுத்து, கல்கி ஆசிரியர் சீதா ரவி, புதிய பார்வை இணையாசிரியர் மணா, 'கல்யாண மாலை' மோகன் உள்பட பலர் கலந்துகொண்ட இவ்விழாவில், பேராசிரியரின் 'வாழ்வியல் நகைச்சுவை' என்ற நூலும் வெளியிடப்பட்டது.

**இரு நூல்களும் வெளியீடு: அமுதா பதிப்பகம், 3, டெப்டி கலெக்டர் காலனி, 3வது தெரு, கே.கே.நகர், மதுரை - 625 020.**

வருவாளாக இருக்கும். பாவாடை ஓரம் என்றும் ஈரமாகவே இருக்கும். சரிதான் கடல்தான். தினம் தினம் அவள்தான் எங்களை வரவேற்று, 'அப்பா... அவாள்ளாம் வந்துட்டா' என்பாள். நாங்கள் ராம சப்தம் முடிந்து, கோதாஸ்துதிக்கு வந்து சேர்ந்திருந்தோம்.

இங்கும் கூந்தல்தான். இந்தமுறை நான் இல்லை; பிச்சமணி. அவன் கனவில் கோதை வந்தாளாம். தலையை வாரியா? விரித்துவிட்டா? என்றேன். சுத்தமாக வாரி, ஒற்றைச் சடை போட்டுத்தானாம். கூந்தலில் மல்லிகை வேறாம். அதுவும் ரெட்டை மல்லியாம். சொன்னான். அவன் கனவில் என்னத்துக்கு என்று நான் கேட்க முடியாது. யார் கனவுகளில் யார் பிரவேசிப்பது என்பது தனிநபர் சுதந்திரம். கனவு வீடுகளுக்குக் கதவுகள் இல்லை.

விஷயம் கனவோடு நிற்கவில்லை. கூந்தல் விதி குறுக்கிட்டது. பிச்சமணி கோதைக்குக் காதல் கடிதம் எழுதுவது என்று தீர்மானித்துவிட்டான். அவனே எடுத்த முடிவு. வழவழ என்று ஒரு தாளை எங்கிருந்தோ சம்பாதித்து பல வண்ணமைகளைப் பயன்படுத்தி ரஸம் (இது காதல் ரஸம். மனசுக்குள்ளே அடுப்பு வைத்துக் கூட்டிக்கொள்வது) சொட்டச் சொட்ட எழுதி இருக்கிறான். ஒருநாள் முந்தின இரவே, மறுநாள் தனக்கு வீட்டு வேலை ஏதோ இருக்கிறது, ஆகவே வகுப்புக்கு வரமாட்டேன் என்றான்.

மறுநாள் வைகறையில் கோழிகள் கண் விழிக்கும் முன்பே வெண்ணாற்றங்கரைக்கு வந்து சேர்ந்திருக்கிறான்.

இருள், மத்திய வயதுக்காராகளின் தலை முடி மாதிரி லேசாக நரைத்தபோது, கோதை ஆற்றுக்கு நீராட வந்திருக்கிறாள். இந்தக் கோதை மாமன் மகள்களைச் சேர்த்துக்கொண்டு வரவில்லை. தனியாத்தான் வந்திருக்கிறாள். படியில் அவள் இறங்கும்போது, கீழ்ப்படியில் இருந்த அவன் கடிதத்தை நீட்டி இருக்கிறான்.

"என்ன இது?"

"கடிதம்."

"அப்பாவுக்கா?"

"இல்லை; உனக்கு."

"எனக்கு என்னத்துக்கு?"

"படி, தெரியும்."

'சரி' என்று அவள் படி இறங்கி இருக்கிறாள். "இங்கேயே படி" என்று அவன் சொல்லவில்லை. கோதை அதைப் படிக்கவில்லை என்பதுதான் உச்சம். எழுதப் படாத வெள்ளைத் தாளான அவள், அந்தக் கடிதத்தை எடுத்துப் போய் அப்பாவிடம், 'பிச்சுமணி சார் கொடுத்தார்ப்பா' என்று கொடுத்துவிட்டிருக்கிறாள். அன்று மாலை சரவணாபவனில் டிபன் சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது பிச்சுமணி இந்தக் கதையைச் சொன்னான். எனக்கு தோசை இறங்கவில்லை. "கெடுத்தியே" என்றேன்.

"முந்திக்கிட்டேன்" என்றான் அவன் சாவதானமாக. வெண்ணாற்றங்கரைப் பக்கம், அந்த ஓடு போட்ட வீட்டுப் பக்கம் அதன்பின் நான் போகவில்லை.

''பிச்சுமணி கடிதம் கொடுக்கவில்லை என்றால், நீங்கள் என்ன செய்திருப்பீர்கள்?' என்று கேட்டாள் சுமதி.

"நான் கொடுத்திருப்பேன். பிச்சுமணி கடிதம் கொடுத்தது அல்ல என் பிரச்னை; அதை நான் தரவில்லையே என்பது."

"ரொம்ப சரி, மூர்த்தி. சரி. என்னிடம் இருந்து ஏன் ஓடி ஒளிகிறீர்கள்? என் கூந்தல் தொந்தரவு செய்யும் எ...பதாலா?"

மூர்த்தி அவள் கூந்தலை நேருக்கு நேராகப் பார்த்தான். அது நதி அல்ல. தலை மலையிலிருந்து வழுக்கி விழும் முடி அருவியும் அல்ல. சௌகர்யத்துக்காகவும், விருப்பப்படியும் முடியை வெட்டிக் கொண்டிருந்தாள் சுமதி.

"ஏன், கூந்தலை வெட்டி இருக்கிறாய்? நேராக விட்டுப் பின்னினால் அழகாக இருக்கும் என்று சொல்ல விரும்புகிறீர்களா?"

"பிறத்தியார் விஷயத்தில் தலை இடும் முட்டாள் அல்ல நான்!"

"மகிழ்ச்சி. இப்போதெல்லாம் பெண்கள் எந்தவகை ஆடை அணியலாம், எந்தவகை முடி வைக்கலாம், எந்த வகையில் எழுதலாம் என்று ஆண்கள்தான் பேசுகிறார்கள்."

"அந்த முட்டாள் கூட்டத்தில் நான் ஒருவர் அல்லன்."

"இரட்டிப்பு மகிழ்ச்சி. அது சரி. என்னைக் கண்டு ஏன் எலி மாதிரி ஓடுகிறீர்கள்? என் கூந்தல்தான் எலி வாலாயிற்றே. நீங்கள் ரசிக்கும்படி நான் கூந்தல் அழகி இல்லையே!"

அவன் மெள்ளமாக மேசையைப் பார்த்தபடி இருந்தான். சர்வர் பஜ்ஜியை வைத்துச் சென்றார்.

"சொல்லுங்கள். என்ன தயக்கம்? அன்று கஸ்தூரி கல்யாண வரவேற்பில் உங்கள் பக்கத்தில் நான் வந்து அமர்ந்தேன். நீங்கள் ஏதோ சாக்கிட்டு எழுந்து சென்றுவிட்டீர்



"நீ ஏன் பத்திரிகைகளுக்கு அனுப்புற ஜோக்'கை கார்டுல அனுப்பாம, கவர்ல அனுப்பறே?"

"கார்டுல அனுப்பினா, அதைப் படிக்கிற போஸ்ட்மேன் சிரிச்சுத் தொலைச்சார்னா?"

- வெ. சீதாராமன்

கள். பல சமயங்களில், உணவு இடை வேளையில், அலுவலக மீட்டிங்கில், கான்டீனில் பல இடங்களில் என்னைக் கண்டு விலகி விலகிச் சென்றுகொண்டே இருக்கிறீர்கள். கூந்தல் பிரச்னையா?"

அவன் அமைதியாக இருந்தான்.

"எந்தக் கூந்தல் உங்களைத் துன்புறுத்தியது? அது அதன் இடத்தில் வளர்ந்து தொங்குகிறது. உங்களை அது சீண்டுவானேன்? அற்புதமேரி உங்களுக்காகவா அந்த ஒற்றை முடியை வளர்த்தாள்! ஆசையாக இருந்தால், அதை அவளிடமே கேட்டு விட வேண்டியதுதானே? அப்புறம், அந்த மாடி மங்கைக் கூந்தலுக்கும் உங்களுக்கும் என்ன தொடர்பு? வேண்டி இருந்தால் மதில் ஏறிக் குதித்து வருவதை அடைய வேண்டியதுதானே? ஏன் செய்யவில்லை? செய்யாததால்தான் கூந்தல் உங்கள் தலைமேல் வளர்ந்து நிற்கிறது."

மூர்த்தி தனக்கு முன் பறக்கும் ஈயைக் கவனித்துக் கொண்டிருந்தான். அப்புறம் வந்திருந்த பூரியில் கவனம் கொண்டான்.

சுமதி, அவர்கள் காபிக்கு வரும்போது, அவனை நோக்கிக் கையை நீட்டினாள்.

"என்ன?" என்றான் மூர்த்தி.

"கை கொடுங்கள்."

கொடுத்தான்.

"மின்சாரம் எதுவும் பாய்கிறதா?"

"இல்லை."

"இருந்தால், மின்சார உற்பத்திக்கு இத்தனைக் கஷ்டம் ஏன்?"

காபி சுமாராக இருந்தது.

"டிகிரி காபி போல இல்லையே..."

"ஆமாம்."

"இருக்காது. சில இடங்களில்தான் சில கிடைக்கும். எல்லா இடங்களிலும் எல்லாம் கிடைக்காது."

அவனுக்குப் புரிவது போல இருந்தது.

"மூர்த்தி... நீங்கள் என்னைக் காதலிக்கிறீர்களா?"

புத்திசாலித்தனமாக, வாழ்க்கையில் முதல் முறையாக 'இல்லை' என்று பொய் சொன்னான் மூர்த்தி.

"நானும் இல்லை. நாம் நல்ல நண்பர்களாக இருப்போம். எனக்கு உங்களைப் பிடிக்கிறது. அதனால்தான் உங்களைத் துரத்தினேன்."

அவர்கள் எழுந்து வெளியே வந்தார்கள்.

உலகம், அவனுக்கு முன்னால், ஓர் உலகத்தைக் காட்டிக் கொண்டிருந்தது.



## கார்த்திகாவின் பிறப்பு!

'கருவாப்பையா...' பாடலின் மூலம் கோலிவுட்டில் பிரபலமான 'தூத்துக்குடி' நாயகி கார்த்திகா, அடுத்து கதாநாயகியாக நடிக்கும் படம் 'பிறப்பு'.

கே.விஜயன், நாசர், பாலா ஆகியோரிடம் உதவி இயக்குனராக பணிபுரிந்த இயக்குனர் எல்.வி.இளங்கோவன் இயக்கும் முதல் படம். நாயகன், புதுமுகம் பிரபா. எஸ்.ஆர்.எம் ஃபிலிம் இன்டர்நேஷனல் சார்பில் பிரமிளா கணேஷ் தயாரிக்கிறார். பரத்வாஜ் இசையமைக்க, ஒளிப்பதிவு, இயக்குனர் பாலுமகேந்திராவின் மகன் ஷங்கி மகேந்திரா.

"தூத்துக்குடி படத்துல நடிக்கும் போதே இந்தப் பட வாய்ப்பு தேடி வந்தது. பூமியில பிறக்குற ஒவ்வொரு பிறப்புக்கும் அர்த்தமுண்டு. அந்தப் பிறப்பு தன்னோட முயற்சியால கடவுளாகவோ, மகாத்மாவாகவோ, சாதாரண மனுஷனாகவோ ஆகலாம்ங்கற வித்தியாசமான கோணத்துல படம் நகருது. ஸ்கிரிப்ட்ல படிச்சதால உடனே ஒப்புக்கிட்டேன். நிச்சயமா மறக்க முடியாத படமா எனக்கு இது அமையும். யார் கண்டது, என்னோட புதுப் பிறப்பு இந்தப் படம் மூலம்தான் நிகழப் போகுதோ என்னவோ" என்று குதூகலிக்கிறார் கார்த்திகா.

- அனுசுயா

# ராசிபலன்

**மேஷம் :** மேன்மையான வாரம். பண வரவு பெருகும். உத்தியோகத்தில் நல்ல பெயர் கிட்டும். கல்வி வளம் வளர்ச்சி அடையும். மகப்பேறு பாக்கியம் கிட்டும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். உடல் ஆரோக்கியம் சீராகும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் கிட்டும். குழந்தைகளைப் பற்றின மனக்கவலை தீரும். சுபநிகழ்ச்சி கைகூடும். ராகு / கேது / சனி / குரு வழிபாடு செய்து வருதல் நற்பலனை அளிக்கும்.

**ரிஷபம் :** யோகமான வாரம். தொட்டது துலங்கும். மனத்தில் உற்சாகம் மிகுந்து காணப்படும். கொடுக்கல், வாங்கலில் சிக்கல் தீரும். உடன்பிறப்பால் அனுகூலம் ஏற்படும். வெளிநாட்டு அழைப்புக் கிட்டும். திருமண காரியம் நடைபெறும். குழந்தை பாக்கியம் கிட்டும். செலவுகள் சுபமானதாக இருக்கும். கொடுக்கல், வாங்கல் சுமூகமான பலனைக் கொடுக்கும். உத்தியோகத்தில் நல்ல பெயர் ஏற்படும். வீடு / வாகனம் வாங்க நல்ல தருணம். ராகு / கேது வழிபாடு நற்பலனைத் தரும்.

**மிதுனம் :** தெய்வ அனுகூலம் நிறைந்த வாரம். பணக்கஷ்டம் இருக்காது. குடும்பம் நன்றாக இருக்கும். முயற்சி செய்யும் காரியத்தில் வெற்றி அளிக்கும். கல்வி வளம் மேலோங்கும். நண்பர், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். வெளிநாட்டு அழைப்புக் கிட்டும். தடை விலகித் திருமணம் கைகூடும். குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

**கடகம் :** சொத்து வாங்க நல்ல தருணம். மகப்பேறு பாக்கியம் கிட்டும். திருமண காரியம் கைகூடும். பூர்வீகச் சொத்துகள் கிடைக்கும். மறைமுக எதிர்ப்பு இருக்கும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் கிட்டும். உத்தியோகத்தில் வேலைப்பளு அதிகரிக்கும். ராகு / கேது / சனி வழிபாடு செய்துவர, நற்பலன் ஏற்படும்.

**சிம்மம் :** அனுகூலமான வாரம். தனம், கல்வி, வாக்கு மேலோங்கும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். நண்பர், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். மனச் சங்கடங்கள் தீரும். புதிய முயற்சிகள் வெற்றி அளிக்கும். திருமண காரியம் கைகூடும். தூர தேசப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**கன்னி :** சத்ரு தொல்லை ஒழியும் வாரம். லக்ஷ்மி கடாக்ஷம் கிட்டும். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். நண்பர், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். வீடு / மனை வாங்க நல்ல காலம். பூமி மூலம் ஆதாயம் கிட்டும். சுபநிகழ்ச்சிகள் கைகூடும். குரு வழிபாடு செய்துவர நற்பலனை அளிக்கும்.

**துலாம் :** பூர்வீகச் சொத்துகள் விற்பனை ஆகும். திருமண காரியம் கைகூடும். வாக்கு வன்மை மேலோங்கும். தீராத வழக்கு முடிவுக்கு வரும். மகப்பேறு பாக்கியம் கிட்டும். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். வியாபாரத்தில் நல்ல லாபம் காணும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வர, நற்பலன் கிட்டும்.

**விருச்சிகம் :** மனபயம் போகும். அசையாத சொத்துகள் வாங்குவீர்கள். திருமண காரியம் கைகூடும். உறவினர், நண்பர்களால் அனுகூலம் ஏற்படும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். குழந்தைகள் வழியில் மன மகிழ்ச்சி பெருகும். உடல் ஆரோக்கியம் சீராகும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். கொடுக்கல், வாங்கல் நற்பலனைத் தரும். சத்ரு தொல்லை விலகும். ராகு / கேது / குரு வழிபாடு செய்துவர, நற்பலன் பெருகும்.

**தனுசு :** செல்வம் மிகுந்த வாரம். தெய்வ பலம் கூடும். கல்வி வளம் மேலோங்கும். சொத்துகள் வாங்க நல்ல தருணம். மன தைரியம் மிகுந்து காணப்படும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். வியாபாரத்தில் அபிவிருத்தி ஏற்படும். குரு / சனி வழிபாடு செய்து வர நற்பலன்



தஞ்சை பரத்வாஜ்








# நடக்குமென்பார் நடக்கும்

## 28.1.2007 முதல் 3.2.2007வரை

அடைவீர்கள்.

**மகரம் :** திருமண காரியம் கைகூடும். கொடுக்கல், வாங்கலில் கவனம் தேவை. சொத்து / மனை வாங்க நல்ல தருணம். உடல் ஆரோக்கியம் சுமாராக இருக்கும். மறைமுகத் தொல்லை இருக்கும். கல்வியில் அக்கறை செலுத்தவும். வேலைப்பளு அதிகரிக்கும். வியாபாரத்தில் அனுகூலமான லாபம் கிட்டும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**கும்பம் :** உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். புதிய தொழில் துவங்க நல்ல காலம். திருமண காரியம் கைகூடும். வெளியூர்ப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். வீடு / மனை வாங்க நல்ல காலம். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வியாபாரத்தில் நல்ல வளர்ச்சி ஏற்படும். கல்வி வளம் மேலோங்கும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். ராகு / கேது / குரு வழிபாடு செய்து வர, நற்பலன் கிட்டும்.

**மீனம் :** மன மகிழ்ச்சியான வாரம். தூர தேச அழைப்பு வரும். முயற்சி செய்யும் காரியம் அனைத்திலும் வெற்றி ஏற்படும். திருமண காரியம் கைகூடும். குழந்தை பாக்கியம் உண்டாகும். கல்வியில் வளர்ச்சி காணும். கொடுக்கல், வாங்கலில் சிக்கல் தீரும். புதிய தொழில் அபிவிருத்தி ஏற்படும். ஊதிய உயர்வு ஏற்படும். வீடு / மனை வாங்க நல்ல தருணம். ஆஞ்சநேயர் வழிபாடு நற்பலனை அளிக்கும்.

## பரத்வாஜ் பதில்கள்

***எனக்கு அரசு வேலை கிடைக்குமா? எனது எதிர்காலம் எப்படி இருக்கும்?***

**- எம்.உமாசங்கர், தூத்துக்குடி**

தங்களுக்கு அரசு வேலை கிடைக்காது; வெளிநாட்டு வேலை அமையும். 30 வயதில் நிரந்தர வேலை அமையும். எதிர்காலம் நன்றாக இருக்கும்.

***என் பையனுக்கு எப்போது திருமணம் நடைபெறும்? நல்ல வரன் அமையுமா?***

**- ஆர்.ஜெயம் ராஜன், மதுரை**

தங்கள் பையனுக்கு 30 வயதில் திருமணம் நடக்கும். படித்த பண்புள்ள, வேலையில் உள்ள பெண் அமைவார்.

***என் உறவினர் ஒருவரைத் திருமணம் செய்துகொள்ள விரும்புகிறேன். நல்லபடியாக முடியுமா?***

**- சாய்பிரபா, கோவை - 62**

உங்கள் ஜாதகப்படி தற்போது சந்திர தசை நடக்கிறது. நீங்கள் யாரையும் விரும்பித் திருமணம் செய்ய முடியாது. உங்கள் ஜாதகத்தில் சர்ப்ப தோஷம் உள்ளதால், தோஷ ஜாதகமாகப் பார்த்துச் சேர்க்கவும். 2007-ல் திருமணம் நடக்கும். உறவில் அமையாது.








# என் கடவுள்... என் தோழன்! 14

நினைத்த காரியம் நடக்க வேண்டும் என்ற கோரிக்கையுடன் கோயிலுக்குச் செல்வோரும் உண்டு; நடந்த நன்மைக்காக நன்றி சொல்ல சன்னிதானத்துக்குள் நுழைவோரும் உண்டு!

அங்கே திருக்கோயிலில் நாம் எந்த நோக்கில் அடியெடுத்து வைத்தோம் என்று பகுத்துப் பார்க்காமல் குருக்கள் பிரசாதம் கொடுக்கிறார். அந்தப் பிரசாத வகைகள், நம்மால் கடவுளுக்காக அர்ப்பணிக்கப்பட்டவைதாம்! அப்படிக் கொடுக்கப்படுபவற்றை நாம் கல்கண்டு என்றோ, துளசி என்றோ சொல்வதில்லை; அலட்சியப்படுத்துவதுமில்லை. அங்கே எது கிடைக்கப் பெற்றாலும், அது பிரசாதம்தான்; அது மரியாதைக்குரியதுதான். ஏனெனில் அது கடவுளுக்கு அர்ப்பணிக்கப்பட்டது.

இப்படித்தான், ஒவ்வோர் உணர்வும், ஒவ்வோர் எண்ணமும் பிரக்ஞையின் பீடத்தில் அர்ப்பணிக்கப்பட்டுத் திரும்பி வருகையில் ஐயத்துக்கிடமின்றி பிரசாதம் தான்! ஆம், ஒவ்வோர் உணர்வும், ஒவ்வோர் எண்ணமும் பிரசாதம்தான்!

இந்த வகையில், வாழ்தல் ஒரு வழிபாடாக ஆகிறது. அது ஓர் உணர்வை மறுதலிப்பதல்ல; எப்படிப் பார்ப்பதென்பதற்கான கற்றல் அது. எண்ணங்களை மறுக்காமல், சிந்திக்கக் கற்பது; அனுபவிக்கக் கற்பது.

இறைவனுக்காக இசையமைத்துப் பாடும் பழக்கம் நமக்கு ஆதிமுதலே உண்டு. ஒருவர் இறைவனைப் பாடுவது அந்த இசையின்பத்தால் மக்களை மகிழ்விக்க அல்ல; கடவுளின் பெருமைகளை வார்த்தைகளில் அடுக்கி, இசையால் தொடுத்துப் பாடுகிறார். எனவே அப் பாடல் நமக்குக் கடவுளை நினைவூட்டுகிறது. அது ஒரு பிரார்த்தனை. இறை பாடலில் ஒவ்வொரு பதத்தின் பொருளையும் புரிந்துகொண்டால், உங்கள் சார்பாக அது கடவுளின் பாதங்களில் சமர்ப்பிக்கப்படுகிறது.

அக்பரின் அரசவை இசைக் கலைஞரான தான்செனைப் பற்றிய கதையொன்று உண்டு!

சிறந்த இசை ரசிகர் அக்பர். ஒரு நாள், தான்சென் தம்முடைய குரு மிக நன்றாகப் பாடுவார் என்று சொன்னார்.



# சுவாமி சுத்தானந்தா

## தமிழ் வடிவம் : சிவசங்கரி

அதைக் கேட்ட அக்பர் அவருடைய பாடலைக் கேட்க விரும்பி, தான்செனிடம் தம் விருப்பத்தைத் தெரிவித்து, அவருடைய குருவிடம் அழைத்துச் செல்லும்படி சொன்னார்.

உடனே தான்சென், "என் குருவுக்கு, அரசர்களுக்காகப் பாடுவது பிடிக்காது. இசையை ரசிக்கும் சாதாரண மக்களுக்காகத்தான் அவர் பாடுவார். ஒருவேளை, நீங்கள் எளிமையான உடையணிந்து சாதாரண குடிமகனைப் போல வந்தால், அவர் பாடச் சம்மதிக்கலாம்," என்றார்.

அதை ஏற்றுக்கொண்ட அக்பர் இன்னும் ஒரு படி மேலே போய், பிச்சைக்காரனைப் போல வேடமிட்டுக் கொண்டு தான்செனுடன் சென்றார். தான்செனின் வேண்டுகோளை ஏற்றுக் கொண்டு அவருடைய குரு சரியான நேரத்துக்காகக் காத்திருந்தார். அன்றிரவு பால்நிலவு பொழியும் வேளையில், மகிழ்ச்சியுடன் பாடத் துவங்கினார். அந்த இசையை அக்பரும் உடனிருந்தோரும் மெய் மறந்து ரசித்தனர். வீடு திரும்பிய அக்பர் சில மாதங்கள் கழித்து, அந்தப் பாடலை நினைவுபடுத்தி, குரு பாடியதைப் போலப் பாடும்படி தான்செனிடம் கேட்க, தான்செனும் பாடினார். பாடல் முடிந்ததும் அக்பர், "நீ நன்றாகத்தான் பாடினாய்... ஆனால், உன் குருவின் இசை என்னை மெய் மறக்கச் செய்தது. அப்படியே.... என் மனத்தைக் கவர்ந்துவிட்டது" என்று கூறியதும், தான்சென் புன்னகையுடன் சொன்னார், "மகாராஜா, நான் அரசருக்காகப் பாடுகிறேன்; என் குரு கடவுளுக்காகப் பாடுகிறார்" என்று.

இவ்வாறு இறைவனைப் பாடும் பாடல் மட்டும் வழிபாடு அன்று; தன் கடமையைத் திருந்தமாக, பொருத்தமாக, ஆத்மார்த்தமாகச் செய்வதும் வழிபாட்டுக்குரியதுதான்.

நமது மரபில், நாம் கோயிலுக்குப் போகும்போது, கடவுளுக்கு அபிஷேகம், நீராட்டுதல் நடத்தப்படுவதைக் காண்போம். பால், தயிர், பன்னீர், இளநீர், தேன், பழங்கள் போன்றவற்றால் அவருக்கு அபிஷேகம் செய்வார்கள். அது வாழ்வின் ஒரு கொண்டாட்டம். கடவுளுக்குச் செய்யப்படுபவற்றை நாம் நமக்கும் செய்துகொள்வோம்.

# எண்ணமும்!

இப்படி நமக்குள்ள ஒவ்வோர் அனுபவமும் கடவுளுக்கான பூஜைதான்; ஒவ்வொரு செய்கையுமே வழிபாடுதான். அப்படியொரு மனோபாவத்துடன் கொண்டாட்ட மனோபாவத்துடன் நாம் வாழ வேண்டும்.

வாழ்தலுக்கான புரிதல் என்பதே கொண்டாட்ட மனோபாவத்துடன் வாழ்வதற்குத் தன்னைத் தானே புரிந்துகொள்வதே! ஒருவர் அப்படித் தன்னைத்தானே புரிந்துகொள்ளவில்லையென்றால், அவரிடமிருந்து பிரக்ஞை



## மீண்டும் ஜெயஸ்ரீ!

ஜெயஸ்ரீயை நினைவிருக்கிறதா? எண்பதுகளில் பல வெற்றிப்படங்களின் கதா நாயகி. நல்ல நிலையில் இருக்கும்போதே கல்யாணம் செய்துகொண்டு அமெரிக்காவில் செட்டிலாகிவிட்டார். இப்போது மீண்டும் அவரைத் தமிழ்நாட்டுக்கு அழைத்து வந்திருக்கிறது ராதிகாவின் ராடன் நிறுவனம். சினிமாவுக்காக அல்ல... சன் டீ.வி.யில் ஒளி பரப்பாகும் 'திருவாளர் திருமதி' என்கிற புது கேம் ஷோவைத் தொகுத்து வழங்க! பணம், வெளி நாட்டுப் பயணம், வீட்டு உபயோகப் பொருட்கள் போன்றவற்றைப் பரிசாகத் தரும் இந்த கேம்ஷோவில் கலந்து கொள்வர்கள் கட்டாயம் தம்பதியராக இருக்க வேண்டும். கணவன் - மனைவியின் உண்மையான அன்பினைப் பிரதிபலிக்கும் வகையில் இருக்கும் இந் நிகழ்ச்சியில் ஆடல், பாடல் கலாட்டாவும் உண்டு.

'உங்களால் இறுதிவரை திறமையாக நடத்த முடியுமா? இல்லை பாதியிலேயே...' என்றால், ''எல்லாம சிறப்பாக வரும். வாயை வைக்காதீர்கள்'' என்று அலறுகிறார் ஜெயஸ்ரீ. ஆல்த பெஸ்ட்!

யற்ற பேச்சுதான் வெளிப்படும். ஏனெனில், தன் எண்ணங்களைப் பற்றிய பிரக்ஞையற்று இருக்கிறார் அவர். நம் மனத்தில் அந்த எண்ணம் தோன்றினாலும் அதை நாம் வெளிப்படுத்துவோம். ஆனால் அதன்படி நடக்காமல் போகலாம்; ஆனால், நம் உடலின் அசைவு அல்லது பேச்சின் மூலம் செயல்படும்போது, அந்தச் செய்கைக்கான எண்ணம் ஒன்று, ஏற்கெனவே நம் மனத்தில் கட்டாயம் இருந்திருக்க வேண்டும். அந்த எண்ணத்தைக் கவனிக்காமல் விட்டிருந்தால், நம் செய்கை பிரக்ஞையற்று இருககும். நம் பேச்சும் பிரக்ஞையற்று இருக்கும். அதற்கு இடம் கொடாமல் நாம் பிரக்ஞையோடு, தீர்மானமாகச் செயல்படுபவராக நம்மை நாமே உணர்பவராக இருந்தால், நம்முடைய ஒவ்வொரு செயலும் வழிபாடுதான். ஆம்; இறை வழிதான்!

(தொடரும்)

# தன் காலே தனக்குதவி!

"குழந்தை பிறந்து வீட்டுக்கு வந்ததும் என் புருஷன் கோவிந்தசாமி என்னைய ரொம்பவும் கட்டாயப்படுத்தினாரு... 'சாக்குப் பையில சுத்தி வெச்சு எங்கேயாவது போட்டுட்டு வந்திடு'ன்னு. வீட்ல எப்ப பார்த்தாலும் தகராறு பண்ணிட்டு இருந்தாரு. பெத்த மனசு பதறிப் போச்சு. கூனோ, குருடோ, குட்டையோ, நெட்டையோ இந்த பூமிக்கு வந்திடுச்சு ஓர் உசுரு. அதனைக் கொல்றதுக்கு நமக்கென்ன ரைட்டு இருக்கு? அது பாட்டுக்கு வளரட்டும். நாம உசுரோட இருக்கறவரைக்கும் காபந்து பண்ணி வளர்ப்போம்னு வளர்த்தேன்!'' என்று சோகம் ததும்பச் சொன்னார் ரோஜாமலர்.

இவரின் நான்காவது பெண் குழந்தைக்கு பிறக்கும்போதே இரண்டு கைகள் இல்லை. விவசாயக் கூலி வேலை செய்து இந்தக் குழந்தைக்கு 'தாமரைச் செல்வி' என்று அழகான பெயரிட்டு, மற்ற குழந்தைகளுக்கு இணையாக நல்ல கல்வி, உணவு, உடை கொடுத்து வளர்த்து ஆளாக்கியிருக்கிறார் ரோஜாமலர். இப்போது தாமரைச் செல்வி புதுக்கோட்டை இராணியார் அரசு மேல்நிலைப் பள்ளியில் ப்ளஸ் டூ மாணவி!

"ஆதனக்கோட்டையில எட்டாவது வரைக்கும் படிச்சேன். அப்புறமா இங்கே ஒன்பதாம் வகுப்புல வந்து சேர்ந்தேன். இங்கேருந்து எங்க ஊரு பதினைஞ்சு கி.மீ தூரம். தினசரி என்னால பஸ்ல தனியா ஏறி எறங்கிப் போய் வர முடியாதுன்னு, இங்ஙனயே பக்கத்துல ஹாஸ்டல்ல தங்கி, தினசரி பள்ளிக்கு வந்துட்டு போறேன். எல்லாரும் என்னைய நல்லா கவனிச்சுக்குறாங்க!''

எழுதணும் படிக்கணும்ங்கற ஆர்வம் சின்னப் புள்ளையிலேர்ந்தே எனக்கு அதிகம். சின்னக் குச்சியெ கால் கட்டை விரல்ல செருகிட்டு, வீதி மணல்ல எழுதப் பழகினேன். ஸ்கூல்ல ஒண்ணாங்கிளாஸ் சேர்ந்ததிலிருந்து எங்க அக்கா ஹெல்ப் போட கால்கட்டை விரல் இடுக்கில் சிலேட்டு பென்சில் செருகி சிலேட்டுப் பலகையில் எழுத ஆரம்பிச்சேன். அப்புறம் பழகப் பழக மத்தவங்க துணையில்லாம தானாவே காலில் பேனா பிடித்து தனித் தாளில் எழுதுவேன். இப்பல்லாம் ஸ்கூல் பரீட்சைகள்ல தேர்வு தாளில் நானே காலில் எழுதிக்கிறேன் என்று தன்னம்பிக்கையோடு பேசும் தாமரைச் செல்விக்கு வக்கீலாகி ஏழை எளியோருக்கு சேவை செய்ய வேண்டுமென்பது லட்சியம்!

* அம்மாவுடன் தாமரைச்செல்வி...





செய்திச் சித்திரம்:
**ஸ்ரீரங்கம் திருநாவுகரசு**

# ஸ்போர்ட்ஸ்

# சச்சினை மிஞ்சிய பெருமை!

பதினாறு வயதில் இந்திய அணியில் இடம் பிடித்த சச்சின் தமது முதல் சர்வ தேசப் போட்டியில் எந்தப் பெரிய சாதனையும் செய்துவிடவில்லை. ஆனால் தமிழகத்தைச் சேர்ந்த டிருஷ்காமினி (பெயர்தான் இப்படி, தமிழ்ப் பெண்தான்!) சச்சினை இந்த ஒரு விஷயத்தில் மிஞ்சி விட்டதால் இப்பொழுதெல்லாம் புன் சிரிப்போடு இருக்கிறார். பதினாறு வயதிலேயே இந்தியப் பெண்கள் கிரிக்கெட் அணியில் இடம் பிடித்ததோடு மட்டுமின்றி தமது முதல் சர்வதேசப் போட்டியிலேயே 'வுமன் ஆஃப் தி சீரீஸ்' பட்டத்தைத் தட்டியிருக்கிறார் இந்த இளம் பெண்.

இந்தச் சிறிய வயதில் பெண்கள் கிரிக்கெட்டின் நம்பிக்கை நட்சத்திரமாகக் காணப்படுகிறார் இவர். இந்தியா, பாகிஸ்தான், இலங்கை என மூன்று நாடுகள் கலந்து கொண்ட ஆசியக் கோப்பைப் போட்டியில் அதிகபட்ச ரன்களும் (135) அதிக விக்கெட்டுகளும் (8) எடுத்து, பெருமைக்குரிய 'வுமன் ஆஃப் தி சீரீஸ்' பட்டத்தைத் தமது முதல் பிரவேசத்திலேயே வாங்கி விட்டார் டிருஷ்காமினி.

"ரோட்ல பெண்கள் கிரிக்கெட் விளையாட முடியாத நிலை. ஆனாலும் தகுந்த ஒரு பயிற்சியாளர்கிட்டே பத்து வயசிலிருந்து கிரிக்கெட் கத்துக்க ஆரம்பிச்சேன். பெரும்பாலும் எல்லா மேட்ச்களிலேயும் நான்தான் 'வுமன் ஆஃப் தி மேட்ச்' பட்டம் வாங்குவேன். அந்தத் தனித்துவம்தான் என்னை இந்திய அணியில் நுழைய வைச்சிருக்கு" என்கிறார் டிருஷ்காமினி. பெண்கள் கிரிக்கெட்டுக்கு முக்கியத்துவம் இல்லாத சூழலில் சுதா ஷா என்கிற முன்னாள் பெண் கிரிக்கெட் வீரர்தான் இவருக்கு ஊக்கமும் பயிற்சியும் கொடுத்து வாழ்க்கையில் பெரிய திருப்பு முனையை ஏற்படுத்தியிருக்கிறார்.

"பெண்கள் கிரிக்கெட் கொஞ்சம் போரடிக்கத்தான் செய்யும். யாரும் பாய்ஞ்சு பாய்ஞ்சு சிக்ஸர் அடிக்க மாட்டோம். அவுட்டாயிட்டா நம்மை அடுத்த மேட்சுக்கு எடுத்துக்க மாட்டாங்களோங்கிற பயம்தான் எல்லோரிடமும் இருக்கு. ஆனாலும் காலம் மாறிட்டு இருக்கு. நாளைக்கு, நாங்களும் ஆண்களைப் போல அதிரடியான கிரிக்கெட் ஆடுவோம்" என்கிறவர் இந்திய அணியில் ஓப்பனிங் பேட்ஸ்மேனாக களம் இறங்குகிறார். ஓப்பனிங் பவுலரும் இவர்தான். கில்கிறிஸ்ட்டைப் போன்ற ஓர் அதிரடி ஓப்பனிங் பேட்ஸ்மேனாக பேர் வாங்க வேண்டும் என்ற லட்சியத்தை வைத்திருக்கிறார்.

விரைவில் தமிழக முதல்வரைச் சந்தித்து ஆசி வாங்க வேண்டும் என்று ஆசைப்படும் டிருஷ்காமினி, சர்ச் பார்க் மாணவி. "ஓ, ஜெயலலிதா படித்த பள்ளியா?" என்றால் உடனே பதில் இப்படி வருகிறது.

"டிருஷ்காமினி படித்த ஸ்கூல்னுதான் இனிமேல் சர்ச் பார்க்கை சொல்வாங்க."

சிக்ஸர்!

- சநகன்

படம் : ஸ்ரீஹரி

## சர்ச்சை

ரவுடி ராஜ்யம் ஒழிப்பு, வெள்ள நிவாரணம், புதிய வீராணம் திட்டம் போன்ற பணிகளால் சென்னையில் உள்ள பதினான்கு சட்டமன்றத் தொகுதிகளில் ஏழில் வென்றது அ.தி.மு.க. அந்த ஏழு எம்.எல்.ஏ.க்களின் பணிகள் எப்படியிருக்கின்றன என்று அறிவதற்காகப் புறப்பட்டோம்.

# பதுங்கும் அதிகாரிகள்... படுத்தும் கோஷ்டிகள்!

### –சென்னையில் திணறும் அ.தி.மு.க. எம்.எல்.ஏ.க்கள்

சென்னை தி.நகரிலுள்ள ராஜு பிள்ளைத் தோட்டம் என்னும் குடிசைப் பகுதியில், மக்கள் கடந்த எழுபது வருடங்களாக மின் வசதி பெறப் போராடி வந்திருக்கிறார்கள். அவர்கள் குடியிருக்கும் நிலம் தொடர்பான பிரச்னை நீதிமன்றத்தில் நிலுவையில் இருந்ததால்தான் இந்தப் பிரச்னை. ஆனால் கலைராஜன் சட்டமன்ற உறுப்பினராக வந்தவுடன், முயற்சி செய்து, பன்னிரண்டு வீடுகளுக்கு மின் வசதி பெற்றுத் தந்துவிட்டார். 'மீதமுள்ள வீடுகளுக்கும் மின் வசதி செய்து தந்து விடுவேன்' என்று நம்பிக்கையுடன் கூறுகிறார். கோடிக்கணக்கில் பணம் புரளும் வர்த்தக நிறுவனங்கள் நிறைய இருக்கும் தி.நகரில் கட்டப்பஞ்சாயத்து, கட்டிங் மேட்டர் எல்லாம் உண்டு. ஆனால் அத்தனையும் தோற்றுப்போன ஆளும்கட்சி முக்கியப் பிரமுகரின் கட்டுப்பாட்டில் இருப்பதாக அ.தி.மு.கவினர் சொல்கின்றனர்.



• ஜெயக்குமார்



• சேகர்பாபு



• பதர்சயித்

கலைராஜனுக்குப் பெரிய மைனஸ், கட்சியில் இவர் வகிக்கும் தென் சென்னை மாவட்டச் செயலாளர் பொறுப்பை 'அபேஸ்' செய்யத் துடிக்கும் எதிர்கோஷ்டி.

திருவல்லிக்கேணி தொகுதியில் தொண்டர்கள் குமுறிக் கொண்டிருக்கிறார்கள். இங்கு எம்.எல்.ஏ.வாக



* செந்தமிழன்



* கலைராஜன்

இருப்பவர் ஜெயலலிதாவின் தோழி பதர்சயித். பொதுமக்களும் தொண்டர்களும் அவரைச் சந்திக்க முடியவில்லையாம். கடந்த பல வருடங்களாகப் பகுதிச் செயலாளராக இருந்த ராமலிங்கம் என்பவரை பதர்சயித் ஜெ.விடம் போட்டுக் கொடுத்து தூக்கி விட்டாராம். இதனால் தொண்டர்களிடம் எதிர்ப்பலை. "அவர் பெண்ணாக இருப்பதாலும் எங்கள் கட்சி கலாசாரத்துக்கு ஏற்றவாறு பழகத் தயக்கம் காட்டுவதாலும், அவரைப் பற்றிக் கதை கட்டி விடுகிறார்கள். மற்றபடி தன்னால் முடிந்ததை தொகுதிக்கு அவர் செய்து கொண்டுதானிருக்கிறார்" என்றார் பதர்சயித்துக்கு வேண்டிய தொண்டர் ஒருவர்.

**மை**லாப்பூர் எம்.எல்.ஏ. எஸ்.வி.சேகரைப் பற்றிய புகார்: சைக்கிளில் டீ விற்கும் பையனிடம் ஓசியில் வாங்கிக் குடிக்கிறார். பலகாரக் கடையில் ஓசியில் பக்கோடா வாங்கிக் கொள்கிறார். "சிரிக்க வைக்கும் எனக்கே சிரிப்பு வரும்படி இருக்கிறதே... என் வீட்டு நாய்க்காககூட பத்து ரூபாய் கொடுத்தே மெதுபக்கோடா வாங்குகிறேன்' என்கிறார் சேகர்.

சமீபத்தில் பிள்ளையார் கோயில் ஒன்றின் எதிரில் இருந்த அரச மரத்தை வெட்டும் விவகாரத்தில் 'வெட்டக் கூடாது' என்று எதிர்த்து நின்றாராம் சேகர். ஆனால், மரத்தால் பாதிக்கப்பட்ட கடைக்காரர் 'வழக்கப்படி' செயல்பட்டு மாநகராட்சி மூலம் மரத்தை வெட்டி விட்டாராம். இதுதான் தொகுதியில் பலத்த பேச்சு.

தயாநிதி மாறனுடன் ஒரு நிகழ்ச்சியில் கலந்துகொள்ள, அதையே சாக்காக வைத்து இவர் தலையை வாங்க எதிர் கோஷ்டி முயல, சேகர், ஜெ.வுக்குத் தன்னிலை விளக்கக் கடிதம் எழுதியுள்ளார்.

**க**ட்சிக்காரர்களின் முழு ஒத்துழைப்புடன் இயங்குபவர் பூங்காநகர் தொகுதி எம்.எல்.ஏ. சீனிவாசன். முதல் முறை எம்.எல்.ஏ.வாகி இருப்பதால் கூடிய வரையில் அதிகாரிகளை அனுசரித்தே தன் செயல்பாடுகளை வகுத்துக் கொள்கிறார். "இந்த ஆறு மாத காலத்தில் முதியோர் ஓய்வூதியத்துக்காக இரண்டாயிரம் விண்ணப்பங்கள் கொடுத்தால் நாற்பதுதான் ஓ.கே. ஆகியுள்ளன. ஆனால் தி.மு.க. வட்டச் செயலாளர் கொடுக்கும் மனுக்கள் உடனடியாக பாஸாகி விடுகின்றன" என்று சொல்லி வருத்தப்படுகிறார். "இன்னும் எங்க தொகுதிக்கு இலவச டீ.வி.யும், அடுப்பும் கிடைக்காதது மட்டுமல்ல, பொங்கலுக்குப் பாதிப் பேருக்கு இலவச வேட்டி சேலையும் கிடைக்கவில்லை" என்கிறார் சீனிவாசன்.

**ஆர்**.கே.நகரில் இரண்டாவது முறையாக எம்.எல்.ஏ.வாகியிருக்கும் சேகர்பாபு, சென்றமுறை அம்மா ஆட்சியில் தனது தொகுதியில் நூறு கோடிக்கு நலத்திட்டங்களைச் செயல்படுத்திக் காட்டியிருக்கிறார். ஆனால் இந்தமுறை திணறிக்கொண்டிருக்கிறார். "சாங்ஷன் ஆகி, பணி ஆணை கொடுக்கப்பட்ட திட்டங்களைக்கூட நிறைவேற்ற இயலவில்லை. குறிப்பாக - பாரதி நகர் திட்டப் பணிகள், நேரு நகர், எம்.ஜி.ஆர் நகர் பாலம் ஆகியவற்றைச் சொல்லலாம்" என்கிறார் சேகர்பாபு.

**க**ண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது போலிருக்கிறார் சைதை தொகுதி எம்.எல்.ஏ.வான செந்தமிழன். பாக்ய




ராஜ் தலைமையில் திருமணம் செய்து கொண்டார் என்பதுதான் இவருக்கெதிரான பெரிய குற்றச்சாட்டு! சகல அதிகாரிகளும், ஆளும் கட்சிப் பிரமுகர்களின் மிரட்டலுக்குப் பயந்து, செந்தமிழனிடம் சகவாசம் கொள்ளவே தயங்குகிறார்களாம். ஏதாவது நல்லது, கெட்டது என்றால், கட்சித் தொண்டர்கள் சைதை துரைசாமியைத்தான் அணுகிறார்கள்.

முன்னாள் அமைச்சர் ஜெயக்குமார், தமது எளிமையான அணுகுமுறை மூலம் அதிகாரிகளிடம் பேசித் தமது தொகுதிக்கு வேண்டியதைச் செய்துகொள்கிறார். இவருக்குச் சமமாக ஆளும் கட்சியில் ஒரு பிரமுகர் இல்லாததால், ஜெயக்குமார் தொல்லை இல்லாமல் செயல்பட்டு வருகிறார்.

* கு.சீனிவாசன்



* எஸ்.வி.சேகர்



மொத்தத்தில் ஆளும் கட்சிப் பிரமுகர்களின் தொல்லைகள், அதிகாரிகளின் ஒத்துழையாமை, உட்கட்சிப் பூசல்கள் எல்லாம் சேர்ந்து தலைநகர அ.தி.மு.க. எம்.எல்.ஏ.க்கள் திணறிக் கொண்டிருக்கிறார்கள்.

''அம்மா எங்களைக் கூப்பிட்டு மீண்டும் நேர்காணல் நடத்த வேண்டும். இல்லையென்றால் அடுத்த சட்டமன்றத் தேர்தலில் சென்னை தி.மு.க.வின் கோட்டைதான் என்று ஒப்புக்கொள்ளும் நிலை வந்துவிடும்'' என்று குமுறுகிறார் தென்சென்னை முக்கியப் பிரமுகர் ஒருவர். ஜெயலலிதாவை நேரில் சந்தித்துக் கருத்து தெரிவிக்க வாய்ப்பு இல்லாத நிலையில், இந்தக் குமுறல் தொடரும்.

- ஸ்ரீநி

படங்கள்: ராஜன்

# தேவமருந்து

Obstetrics and Gynaecology என்று நவீன மருத்துவத்தில் அழைக்கப்படுகிற மகப்பேறு மருத்துவம், குழந்தை கருவில் உண்டான நாளிலிருந்து, பிரசவம் வரை நிகழக்கூடிய எல்லாவிதமான பிரச்னை களுக்கும் தீர்வு தரக்கூடியதாக உள்ளது. நமது பழங்கால பாரம்பரிய நூல்களி லேயே பெண்களுக்கு உண்டாகக் கூடிய அத்தனை நோய்களும் சிகிச்சை முறை களும் விவரமாகக் கொடுக்கப்பட்டுள் ளன! ஆயுர்வேதத்தில் இரண்டாவது அங்கமாக அமைந்துள்ள பால சிகிச்சை யில், ஒரு பெண் கர்ப்பமான காலந் தொட்டே அவளுக்கு வழங்கப்பட வேண் டிய உணவுகள், உடற்பயிற்சிகள் ஆகிய வற்றைப் பற்றி விலாவாரியாகக் கூறப் ப்பட்டுள்ளது.

அந்த நூல்களில் கர்ப்பாதானம், (ஆரோக்கியமான நன்மக்களைப் பெறு வதற்கான வழிகள்) தாயின் மனநிலை யைப் பேணிக் காக்கின்ற மந்திரங்கள், குழந்தையைக் குறைப் பிரசவமில்லாமல் பெற உதவும் மருந்துகள் போன் றவை எல்லாம் கூறப்பட்டுள்ளன.

குழந்தை இல்லாதவர்களுக் கென்று பிரத்யேக சிகிச்சையாக வாஜீகரண சிகிச்சையும், சுக்கிர வர்த்த மான (சுக்கிரத்தை அதிகரிக்கும்) மருந்து களும் விவரிக்கப்பட்டுள்ளன.

**'பெண்' தத்துவம்**

வேத நூல்களில் பெண் அக்னியின் ஸ்வரூபமாகக் கருதப்படுகிறாள். பெண்ணை 'தாம் அக்னிவர்ணாம் தபஸா ஜ்வலந்தீம்' என்று போற்றிச் சொல்கிறது வேதம். பெண்ணிடம் இருக்கும் estrogen ஹார்மோனில் அக்னியின் துல்லியமான குணங்கள் உள்ளன. ஆணின் testosterone ஹார்மோன், ஸோமம் எனும் குணம் வாய்ந்தது. வேதம் பெண்ணை 'க்ஷேத்ரம்' என்ற பூமியாகவும், ஆணை 'பீஜம்' (வித்து) எனவும் வர்ணிக்கின்றது. பெண்களுக் கான பூப்படையும் வயது பன்னிரண்டாக வும் மாதவிடாய் நிற்கும் வயது ஐம்பதாக வும் கூறப்பட்டிருக்கிறது.

**பெண்களுக்கு ஏற்படும் பிரச்னைகள்:**

பிரசவம் பார்க்கும் முறைக்கு 'பிர

# பெண்மையைப்



ஸூதி தந்திரம்' என்று பெயர். வசதிகள் அதிகமில்லாத காலகட்டத்திலும் பெண் கள் அதிக எண்ணிக்கையில் ஆரோக் கியமான குழந்தைகளைப் பெற்றுக் கொள்வது நடந்துள்ளது.

பிரசவம் சார்ந்த பல்வேறு அறுவை சிகிச்சை முறைகளும் ஸுச்ருதர் போன்ற வர்களால் வர்ணிக்கப்பட்டுள்ளன. பெண்களுக்கு ஏற்படும் பிரச்னைகளாக மாதவிடாய்க் காலங்களில் வரும் வலி, உதா வர்த்தம், மாதவிடாய்க் காலங்களுக்கு முன்பு காணப்படும் மன அழுத்தம், முரணான இரத்தப்போக்கு, இரத்தப் போக்கின்மை, குழந்தைப் பேறின்மை,

**டாக்டர்**

**எல்.மஹாதேவன்**

என்டோமெட்ரியோஸிஸ் (இரத்தச் சவ்வானது கர்ப்பப் பையிலிருந்து விடுபட்டு வேறிடங்களில் படிந்து அவ்விடத்தில் இரத்தப்போக்கை உண்டாக்கி வலி ஏற்படுத்தும் நோய்) மார்பகப் புற்று நோய், மேலும் மாதவிடாய்க் காலங்களில் ஏற்படும் நோய், சினை முட்டைகளில் ஏற்படும் நோய், கர்ப்பப் பையில் ஏற்படும் நோய், பகம் என்கிற வெளிப்பகுதியில் ஏற்படும் நோய், குழந்தைப் பேறின்போது ஏற்படும் நோய் என ஒன்று விடாமல் அனைத்தையும் ஆயுர்வேதம் ஆய்ந்து சிகிச்சை கூறுகிறது.




பன்னிரண்டிலிருந்து பதினாறு வயது வரை உள்ள பெண்ணை 'ரஜோமதி' என்பார்கள். இந்த வயதில்தான் பெண்கள் பூப்படைவர்; இந்தச் சமயத்தில்தான் உடலில் கபத்துடன், பித்தமும் சேரும். அதைத்தான் ஆங்கில மருத்துவம் hormonal changes என்று குறிப்பிடுகிறது. பதினாறிலிருந்து, நாற்பது வயதுள்ள பெண்ணை 'யுவதி' என்பார்கள். இந்தக் கால கட்டத்தில்தான் பெண்ணுக்குத் திருமணமாகி, பிள்ளைப் பேறும் உண்டாகிறது. அப்போது உடலில் பித்தம் முக்கியமானதாகக் காணப்படுகிறது. ஐம்பது வயதுக்கு மேற்பட்ட காலத்தில் பெண்ணை 'விருத்தன்' என்பார்கள். அப்போது உடலில் வாதம் மிகுந்து காணப்படும்.

# போற்றுவோம்!

### மாதவிடாய்

ஆயுர்வேத புத்தகங்கள் மாதவிடாயின் போது வெளியேறும் இரத்தத்தை 'ஆர்த்தவம்' என்றும், கர்ப்பப் பையில் உண்டாகும் சினை முட்டையை 'ஸ்திரீ பீஜம்' என்றும் சொல்கின்றன. மாதவிடாய்க் காலமானது சந்திர மாதமான இருபத்தெட்டு நாட்களைக் கொண்டு நிர்ணயிக்கப்பட்டது. இருபத்தெட்டு நாள் சுழற்சியில் உதிரப் போக்குக் காலம் வாத காலமாகவும், பின்பு 'கர்ப்பாதானம்' என்கிற (உதிரப் போக்கு தொடங்கிய 5 - 14 வரையிலான) நாட்கள் கபகாலமாகவும், பதினைந்து நாட்களுக்குப் பிறகு உள்ள காலம் (Secretary phase) பித்த காலமாகவும் பிரிக்கப்பட்டுள்ளது.

### மாதவிடாய்க்கு முன்பு காணப்படும் மன அழுத்தம் :

இன்று மாதவிடாய்க்கு முன்பு உடலில் ஏற்படும் பிரச்னைகளுக்கு 'ப்ரிமென்ஸ்ட்ருவல் சின்ட்ரோம்' என்று பெயர். இது estrogen மற்றும் progesterone ஹார்மோன்களின் ஏற்றத் தாழ்வினால் வருகிறது. இந்தக் கட்டத்தில் ஈஸ்ட்ரோஜன் சுரப்பு மிகுவதால், உடலில் 'சோபம்' என்கின்ற நீர்த்தேக்கம், உடல்

எடை கூடுதல், மார்பகத்தில் அழற்சி, வயிறு நிரம்பிய உணர்வு போன்றவை ஏற்படுகின்றன. இந்தப் பிரச்னைகள் ஒவ்வொரு பெண்ணுக்கும், மாறுபடுவதோடு, மாதத்துக்கு மாதம் வேறுபடும்.

பசியில் வேறுபாடு, மயக்கம், தலைச் சுற்றல், தலைவலி, இடுப்பு வலி, தூக்கமின்மை, சோர்வு, வாந்தி எடுக்கும்



உணர்வு, உடல் அசதி, தோல் அரிப்பு, உடல் எடை கூடுதல் போன்ற உடல் சார்ந்த பிரச்னைகளும், கோபம், வருத்தம், சோர்வு, சோகம் படபடப்பு போன்ற மனப் பிரச்னைகளும் ஏற்படக் கூடும்.

இந்த உடல் சார்ந்த விஷயங்களும், மனப் பாதிப்பும் அன்றாட வாழ்க்கையைப் பாதிக்கிறவையென்றாலும் காக்காய் வலிப்பினால் அவதிப்படுகின்ற பெண்களுக்கு இந்தக் காலக் கட்டத்தில் வலிப்பு அதிகம் ஏற்படுகிறது.

மேற்கூறிய பிரச்னைகள் பித்தம் அல்லது வாதப் பித்தம் சார்ந்தவை. இதற்குப் பித்தத்தைச் சமனம் செய்யும் படியான திராக்ஷாதி கஷாயம், பஞ்சகந்த சூரணத்தை க்ஷீரபலா தைலத்தில் கலந்து தலையில் தளம் வைப்பது, பால் முதப்பன் கிழங்கினால் செய்யப்பட்ட சதாவரி பால் கஷாயம், குமாரி லேகியம், மானசமித்திர வடி போன்றவற்றைக் கொடுப்பது நல்லது.

கல்யாணக குளம் கொண்டு மலம் இளக்கும் சிகிச்சை செய்தல், மஹாநாராயண தைலம் கொண்டு நஸ்யம் ஆகியவற்றை மாதவிடாய் வரும் ஒரு வாரத்துக்கு முன்பு செய்ய வேண்டும். அடுத்த மாதவிடாய் சுழற்சியிலிருந்து கல்யாணக நெய், மாதுளம்பழத்தால் செய்யப்பட்ட தாடி மாதி நெய் ஆகியவற்றை இரவில் சாப்பிடுவது நல்லது. காரம், புளி, எண்ணெயைக் குறைத்துச் சாப்பிட வேண்டும். காபி, டீ போன்றவற்றைக் குறைப்பது நல்லது.

ஒற்றை மூலிகைகளான, சோற்றுக் கற்றாழை, நெல்லிக்காய், சதாவரி (பால் முதப்பன் கிழங்கு), லோத்ரா (வெள்ளி லோத்திப் பட்டை), மரமஞ்சள், சிவப்புத் தாமரை, செம்பருத்தி போன்றவை மிக முக்கியமான மருந்துகளாகக் கருதப்படுகின்றன. தலைக்கு நெல்லிக்காய்த் தைலம் வைப்பது சிறந்தது.

ப்ரி மென்ஸ்ட்ருவல் ஸின்ட்ரோம் என்பதை ஒரு நோயாகப் பாராட்டாமல் அக்காலகட்டத்தில் குடும்பத்தார் உதவியுடன் வாழ்க்கை முறையில் சிற்சில மாற்றங்களைக் கையாண்டு மன-உடல் இலகுத்தன்மைக்கு வழி செய்து கொள்வதே நல்லது. மிகத் தீவிரமான தொந்தரவு உள்ளவர்கள் மருத்துவ உதவியை நாடலாம்.

(தொடரும்)

## தன்வந்தரி டாலர் பரிசுப் போட்டி - 12

**மா**தவிடாயின்போது ஏற்படும் வயிற்று வலி நிவாரணத்துக்கு உகந்த - வீட்டில் எளிதில் தயாரிக்கக்கூடிய- கைமருந்தினை அஞ்சலட்டையில் எழுதி அனுப்புங்கள். முதல் பரிசாக டாக்டர் எல்.மஹாதேவன் தன்வந்தரி டாலர் பரிசளிப்பார். இரண்டாவது பரிசாக தேவமருந்து முதல் பாகம் புத்தகம். 'பரிசுப் போட்டி 12' என்று முகவரிப் பகுதியில் குறிப்பிடவும்.

**கடைசி தேதி : 5.2.2007**

**ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.**

- ஏராளமான ஓவிய ஆசிரியர்களை உருவாக்கிய ஒப்பற்ற கலைக்கூடம்.
- பலரும் வேலைவாய்ப்பை பெற்றுள்ளனர்.




## அஜந்தாவின்

அர்ப்பணியில் உங்களையும் இணைத்துக் கொள்ளுங்கள்...

# ஓவிய ஆசிரியர் பயிற்சி

வீட்டில் இருந்தபடியே தபால் மூலம் படிக்கலாம்.

**கல்வித் தகுதி - SSLC, +2**

- ஆண்கள், பெண்கள் தனித் தனி வகுப்புகள்.
- நேர்முகப் பயிற்சியும் உண்டு.

உங்கள் முகவரியை ஒரு தபால் கார்டில் எழுதி அனுப்புங்கள். அல்லது தொலைபேசியில் தெரிவியுங்கள். இலவச விவரப்புத்தகம் உங்கள் இல்லம் தேடி வரும்...

வெற்றிகரமான 21-ஆம் ஆண்டில்...

## AJANTHA SCHOOL OF ARTS

(Govt. Regd.)
6, Muthu Nagar, Poonamallee, Chennai - 56.
Ph : 044 -26490363, Cell: 9381050477, 9940390708

---

# சரோஜா வைத்யநாத ஐயர் பரம்பரை ஜோதிடர்

ஜோதிடத்தில் 50 வருட அனுபவம் கொண்ட
"ஜோதிட வாணி"

**ஸ்ரீமதி சரோஜா வைத்யநாத ஸ்வாமி ஐயர்**

கைரேகை, ஜாதகம், நியூமராலஜி, வாஸ்து,
சாமுத்ரிகா லக்ஷணம், திருமணப் பொருத்தம்,
அனைத்தும் பார்க்கப்படும்.

அனைத்து ஆலோசனைகளும் வழங்கப்படும்.

V.சரோஜா, 45/18, ஸ்ரீநிவாச ஐயர் தெரு, மேற்கு மாம்பலம்,
அயோத்யா மண்டபம் அருகில்,
பிள்ளையார்கோவில் அருகில் உள்ள தெரு.
Ph: 23716892, Cell: 9444230523, 9444684006

# நீங்கள் கேட்டவை—தராசு

● இரா.சக்கரபாணி, மதுரை - 7

*? மாணவர்களுக்கு உடல் ரீதியான தண்டனை அளிக்க அனுமதிக்கும் கல்வி விதி 51 நீக்கப்பட்டுவிட்டதே?*

! பெற்றோரையும் உள்ளடக்கியே இந்த நீக்கல் உத்தரவு செயல்பட வேண்டும். குழந்தைகளின் உரிமைகளுக்கு மதிப்பு தரும் காலம் இது. அதே சமயம் சிறுவர்-சிறுமியரை நல்வழிப்படுத்தும் திறனும் பெற்றோருக்கு இருக்க வேண்டும். கல்லூரிகளில் இதற்கு நேரம் ஒதுக்கி குடும்ப நலன் போதிக்க வேண்டும்.

● மு.செந்தில்குமார், சோமரசன் பேட்டை ❒

*? தூக்கு தண்டனையை தனிப்பட்ட முறையில் எதிர்ப்பதாக உச்சநீதிமன்ற முன்னாள் தலைமை நீதிபதி கூறியுள்ளாரே?*

! அவ்வாறு கருத அவருக்கு முழு உரிமை உண்டு. சட்டத்தின் மாண்பு கருதி தமது தனிப்பட்ட கருத்தை இந்நாள் வரை ஒதுக்கி வைத்திருந்தவர், ஓய்வுபெற்ற பின் பேசியிருக்கிறார். சட்டத் திருத்தம் செய்வதும் செய்யாததும் நாடாளுமன்றத்தின் பொறுப்பு என்றும் தெளிவுபடக் கூறியிருக்கிறார்.

● எஸ்.சங்கர், திருப்பரங்குன்றம். ✱

*? இரண்டு முறை கேப்டனாக இருந்த சச்சின் டெண்டுல்கருக்குத் 'துணை கேப்டன்' பதவி வழங்கப்பட்டிருப்பது சரியா?*

! தவறல்ல. கேப்டன் பொறுப்பில் இருந்தால் ஆட்டத்தில் சிலரால் பிரகாசிக்க முடியாமல் போகும். அத்தகைய நிலையில் துணை கேப்டன் பதவியானது ஆட்டம், ஆலோசனை இரண்டிலும் ஒளிர உதவும்.

● கே.வி.ராமன், சென்னை - 73

*? 2002-ல் பா.ஜ.க. ஆட்சியின்போது வழங்கப்பட்ட 297 பெட்ரோல் பங்க் உரிமங்களை உச்சநீதிமன்றம் ரத்து செய்துள்ளதே?*

! அரசியல்வாதிகள் செய்யும் ஆயிரக்கணக்கான மோசடிகளுள் ஒன்று நேராக்கப்பட்டுள்ளது!

● டி.முருகேசன், இருவாரூர்

*? 'அசாமில் ராணுவ நடவடிக்கை நீடித்தால் காங்கிரஸ்*

✱ கவலைக்குக் கவலை!



✱ தீர்ப்பைத் தொடர்ந்து...



✱ புட்டு வைக்கும் பாட

தலைவர்களைக் கொல்வோம்' என்று உல்ஃபா தீவிரவாதிகள் மிரட்டல் விடுத்திருப்பதைப் பற்றி...?

! ராணுவத்தை ஆஜர்படுத்துவதால் தற்காலிகமாகப் பிரச்னை குறைவதாகத் தோன்றும்; விரைவிலேயே அது மேலும் சிக்கலாக்கப்பட்டுவிடும் என்பதற்கான பட்டவர்த்தனமான நிரூபணம்.

● ச.இராசன், திருச்சி

? "சாதிகள் இல்லையடி பாப்பா" என்று பாடிய பாரதியார் "குலத் தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்" என்கிறாரே - குலம் உண்டு; ஆனால் உயர்வு - தாழ்வு கூடாது என்று பொருள்கொள்ள வேண்டுமோ?

! "எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் ஓரினம், எல்லோரும் இந்திய மக்கள்" என்று புட்டுப் புட்டு வைச்சுட்டாரே

● லெ.நா.சிவகுமார், சென்னை-33

? சதாம் ஹுசைன் தூக்குத் தண்டனையை எதிர்கொள்ளும் வகையில் அதற்கான பயிற்சி செய்து தம்மைத் தயார்ப்படுத்திக் கொண்டார் என அவரது வக்கீல்கள் தெரிவித்துள்ளார்களே?

! அவருக்காவது அதற்கான வசதியும் அவகாசமும் இருந்தன. அடுத்த கணம் சாகப்போகிறோம் என்பதை அறியாமல், அவரால் உயிர் பறிக்கப்பட்டுப் பரிதாபமாகச் செத்தவர்களை நினைத்துப் பாருங்கள்!

● பா.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

? 'திறமை வாய்ந்த தலைவர்கள் இந்தியாவில் இல்லை' என்று இன்ஃபோஸிஸ் நாராயணமூர்த்தி கூறியுள்ளதைப் பற்றி...?

! செல்லப் பிள்ளையாகக் கருதி ஏகப்பட்ட சலுகைகளை ஐ.டி. துறைக்கு வாரி வழங்கியிருப்பதிலிருந்தே இது உறுதிப்படுகிறதே!

# சச்சினைத் துணை


● மரணப் பயிற்சி!


● செல்லப் பிள்ளை!


● ஒளிரும் ஆலோசனை

# கேப்டனாக்கியது சரியா?

மகாகவி... இன்னும் கேள்வி கேட்டா எப்படிங்க!

● கே.கே.வெங்கடேசன், வேலூர்

? சிலம்பரசன் மனக்கவலையிலிருந்து மீண்டு விட்டாரா?

! அவர் கவலையிலிருந்து விடுபட எத்தனையோ வழிகள் இருக்கும். அவரைப் பற்றிக் கவலைப்படுவதிலிருந்து நீங்கள் முதலில் விடுபடுங்கள், வெங்கடேஷ்!

● எல்.திருவடி, மதுரை-16

? தனியார்மயக் கொள்கையை வலியுறுத்தி அன்று ராஜாஜி சுதந்திரா கட்சியை ஆரம்பித்தபோது, அவரைப் பிற்போக்குவாதி என்று ஏளனம் செய்த

காங்கிரஸ், கம்யூனிஸ்ட், சோஷலிஸ்ட் கட்சிகள் இன்று அதே கொள்கையைப் போட்டி போட்டுக்கொண்டு ஆதரிக்கின்றனவே... இவர்களை என்னவென்று அழைப்பது?

! ஒன்றும் அழைக்க வேண்டாம். "இப்போதாவது சுதந்திர பொருளாதாரத்தின் சிறப்பையும் பர்மிட் லைசன்ஸ் ராஜ்யத்தின் தீமையையும் புரிந்து கொண்டீர்களே!" என்று வாழ்த்துங்கள்.

● கே.துரைசாமி, மங்களப்பட்டி

? கலைகளை ரசிக்க கண், காது, மூளை என்ற மூன்றில் எது முக்கியமானது? ஏன்?

! மூன்றும் சம அளவு முக்கியம்; அவற்றைவிட மும்மடங்கு முக்கியம் திறந்த மனம். பி.கு.: அது சரி, மற்ற மூன்று புலன்களை விட்டுவிட்டீர்களே, ஏன்?

❑ ரூ.100/- பரிசு பெறுபவர்:

**மு.செந்தில்குமார்,**
3/121, பெருமாள் கோயில் தெரு,
கொடாப்பு (உ.தி.மலை),
சோமரசன்பேட்டை,
திருச்சி - 620 102

● பி.ராஜாமணி பெரியசாமி, முத்தம்பட்டி

? மனைவியிடம் 'ரகசியம்' என்று எதையாவது மறைக்காத ஆண்கள் உண்டா?

! இல்லை; கணவன் ரகசியமாக மறைப்பதை மனைவி பெரும்பாலும் மிக ரகசியமாகத் தெரிந்து வைத்திருக்கிறாள் என்கிற பரம ரகசியத்தை அறியாத ஆண்களும் கிடையாது!

● ஆர்.ராமன், சென்னை-63

? Aids Control (கட்டுப்பாடு) Board என்று பெயர் வைத்துள்ளார்களே; Aids Eradication (ஒழிப்பு) Board என்றல்லவா பெயரிட்டிருக்க வேண்டும்.

! நோய் பரவுவதைக் கட்டுப்படுத்த வேண்டும் என்பதுதான் நோக்கம். ஒழிப்பதற்கான மருந்துதான் இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லையே!

● ராஜ்குமார், காராப்பாடி

? ஆண் குழந்தை, பெண் குழந்தை - இருவருள் அப்பா அம்மாவைக் கடைசி வரை காப்பாற்றுவது யார்?

! பெண்ணும் இல்லை; 'சன்'னும் இல்லை! 'பென்ஷன்'தான் கடைசிவரை காப்பாற்றும். ஏதேனும் சேமிப்பு இல்லையெனில் தன்மானத்தைச் சேமிக்க முடியாது.

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

? எதற்கும் கலங்காத தன்னம்பிக்கையும் எதையும் எதிர்கொண்டு போராடும் மனவலிமையும் பெற நல்ல வழி...?

! அப்படியெல்லாம் வாழ்ந்த பெரியவர்களின் வாழ்க்கை வரலாறுகளைப் படியுங்கள்.

● மல்லிகை மன்னன், மதுரை

? உயர்நீதிமன்ற தீர்ப்புக்கு மதிப்பளித்து 99 கவுன்சிலர்களை ராஜினாமா செய்ய வைத்த கருணாநிதி, அதிகாரிகள் விஷயத்தில் எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லையே?

! தேர்தலில் வன்முறைக்குக் காரணம் கட்சி ஆட்கள், குண்டர்கள். எனவே கட்சித் தலைமை அவர்களைக் கட்டுப்படுத்த வேண்டும். இது நடக்காத வரை அதிகாரிகள் மாற்றத்தால் மட்டும் பயன் இராது.

★ ரூ.50/- பரிசு பெறுபவர்:

**எஸ்.சங்கர்,**
1/16, நடராஜர் தெரு,
பாலாஜி நகர், திருப்பரங்குன்றம்,
மதுரை - 625 009

● எச்.எம்.சமீர், எலந்தங்குடி

? நிலம், சிலிண்டர் என்று தேர்தல் வாக்குறுதிகளைப் பகுதி பகுதியாக அடுத்த தேர்தலுக்குள் தமிழக அரசு முற்றிலுமாக நிறைவேற்றிவிடும் என்று நம்பலாமா?

! அரசு, கட்சி அறிக்கைகளில் நிறைவேறிவிடும் என்று நம்பலாம்; மக்களிடையே அல்ல. ●

# வட்டமேஜை

**கு**சும்புராஜின் கற்பனைத் தொலைக் காட்சி உண்மையிலே குசும்புதான். ஓவிய வெளிப்பாடு ரியலி சூப்பர்!

**- கே.மோகனசுந்தரம், பாளையங்கோட்டை**

**தே**வமருந்து, உடலின் பிரச்னைகளை அறிய உதவும் அற்புத நிவாரணி.

**- எஸ்.மீனா, ஸ்ரீரங்கம்**

**செ**ங்கோட்டையன் தமது பேட்டியில் அ.தி.மு.க.வின் ப்ளஸ் பாயிண்ட்ஸ், தி.மு.க.வின் மைனஸ் பாயிண்ட்ஸை பாயிண்ட் பாயிண்டாக எடுத்துரைத்திருந்தார்.

**- எம்.இராஜேந்திரன், லால்குடி**

**செ**ன்னைப் பல்கலைக்கழகத்தைப் பற்றிய கட்டுரை சிறப்பாக இருந்தது.

**- ஜி.லட்சுமி வாசுதேவன், சென்னை-42**

**ர**சிகர்கள், படத்தைப் படமாக மட்டும் பார்க்கும் மனோபாவத்தை வளர்த்துக்கொள்ள வேண்டும் என்று அஜீத், விஜய் ரசிகர்களுக்கு கல்கி அறிவுறுத்தியிருப்பது நல்லதொரு சமூகப் பொறுப்புணர்வு!

**- லெ.நா.சிவகுமார், சென்னை - 33**

**மா**ணவர்களே மாணவர்களுக்கு வழிகாட்டும் +2 தொடர், மிகவும் பயனுள்ளதாக அமைந்துள்ளது. தொடரட்டும் தங்கள் பணி.

**- ஆர்.அம்பிகா, மதுரை**

**கா**தலுக்கும் நட்புக்குமிடையேயான வேறுபாட்டை இதமாய்ப் புலப்படுத்திய 'காதலுக்கும் கண்கள் உண்டு...' சிறுகதைக்கான ஓவியம் புருவத்தை உயர்த்தச் செய்தது!

**- எஸ்.எம்.பாலசுப்ரமணியன், போடிநாயக்கனூர்-9**

"**ச**க்தி அல்லது ஆற்றல் என்பது வெளியிலிருந்து வருவதல்ல; உள்ளுக்குள்ளேயிருந்துதான் வந்தாக வேண்டும்" என்று ஸ்ரீ லலிதாவில் சுதா சேஷய்யன் சொல்லியிருப்பது எவ்வளவு உண்மை! குண்டலினி ஆற்றல் சுருள் வடிவில் உள்ளே உறைவதாகச் சொல்கிறார். மனித உடலின் மிகச்சிறிய உயிரணுவின் விட்டம் 10 மைக்ரோ மீட்டர் அளவுதான். இதற்குள் சுமார் இரண்டு மீட்டர் நீள டி.என்.ஏ. சுருண்டு உறைகிறது. அதாவது 2,00,000 மடங்கு குறுக்கப்பட்டு அடங்கிக் கிடக்கிறது! ஸ்ரீ லலிதா எத்தகைய அற்புத சிருஷ்டி உண்மையை விண்டுரைக்கிறது என்று நினைத்து நினைத்து வியக்கிறேன்!

**- சேதுராமன் சுப்ரமணியன் (மின் அஞ்சல் மூலமாக)**



## புருவத்தை உயர்த்திய ஓவியம்!

ஸ்ரீலலிதா

# சக்தியின் லேகை!

சுதா சேஷய்யன்

20

**தேவர்ஷிகணசங்காத** - (தேவ-ரிஷி-கண சங்காத) - தேவர்கள், ரிஷிகள் இவர்களோடு பூத கணங்கள் அல்லது தேவ கணங்களாக (கூட்டங்களாக) இருப்பவர்கள், ரிஷி கணமாக - நாரதர் முதலான கூட்டத்தினர் - அத்தனை பேரும் கூட்டமாக - அதாவது சங்கமாகச் சேர்ந்து என்ன செய்கிறார்கள் என்று பார்த்தால், அத்தனை பேரும் ஸ்தோத்திரம் செய்கிறார்கள். அப்படி அவர்கள் ஸ்துதிக்கக் கூடிய ஆத்மாவாக இருக்கக்கூடியவளே அம்பாள்.

**ஸ்தூயமானாத்மவைபவா** - ஸ்துதிப்பவளின் ஆன்மாவாக இருப்பவளே, வைபவா!

'வைபவா'வை முன்னும் சேர்க்கலாம்; பின்னும் சேர்க்கலாம். வைபவம் என்றால் அம்பாளுடைய சிறப்பு என்று பொருள். சிறப்புகள் வாய்ந்தவள் என்பதால் இத்தனை பேரும் துதிக்கிறார்கள் என்று அர்த்தம் கொள்ளலாம். அல்லது அத்தனை பேரின் ஸ்தோத்திரத்துக்கும் சிறப்புப் பொருளாக அவள் இருக்கிறாள் என்றும் அர்த்தம் கொள்ளலாம். எப்படி இருந்தாலும், தேவர்கள் – ரிஷிகள் – தேவரிஷிகள் அனைவரும் கூட்டம் கூட்டமாகக் கூடித் துதிக்கக் கூடியவள் என்று பொருள்.

அவர்களெல்லாம் போய் அம்பாளைத் துதித்து என்ன கேட்டார்கள்...?

"இந்தப் பண்டாஸுரன் படுத்துகிற பாடு தாங்கவில்லை. தாயே, காப்பாற்று!" என்று வேண்டினார்கள்.

பண்டன் என்றாலே நல்லவன் என்றுதான் அர்த்தம். நல்லவன் எப்படி அசுரனாக மாறினான்?

லலிதோபாக்யானம் சொல்லக்கூடிய கதையைப் பார்ப்போம்: பண்டாஸுரனைப் பற்றிய கதை. ஏற்கெனவே மன்மத தகனத்தைப் பற்றிப் பார்த்தோம் அல்லவா!

## கைலாயத்தில் ஒரு குழந்தை

மன்மதன் எரிந்து போனான். ஈசுவரனின் நெற்றிக்கண்ணால் எரிந்து சாம்பல் ஆனான். அந்தச் சாம்பல் கீழே கிடந்தது. அங்கே கைலாயத்தில் விளையாடிக் கொண்டிருந்த குழந்தை - கைலாயத்தில் விளையாடும் குழந்தை யாராக இருக்க முடியும்?... சாக்ஷாத் விநாயகர் விளையாடிக் கொண்டிருந்தாராம். அவர் என்ன பண்ணினாரென்றால், அந்தச் சாம்பலை எடுத்து அப்படியும் இப்படியுமாகத் தனது கைகளால் பிடித்துப் பிடித்து விளையாடினாராம்!

சின்னக் குழந்தைகள் விளையாடிப் பார்க்கிறோமில்லையா, - மண் கிடைத்தாலோ, கையிலே களிமண் அல்லது கொஞ்சம் பிளாஸ்டிக் பிசின் கிடைத்தாலோ அதை எப்படி அவர்கள் பிடித்துத் திருப்பி ஓர் உருவத்தை உருவாக்குகிறார்கள் - அந்த மாதிரி ஓர் உருவத்தை உருவாக்கி

விட்டார் விநாயகர்.

கைலாயத்தில் இருந்த விசேஷத்தால், அந்தச் சாம்பல் உருவம்கூட தவம் பண்ண ஆரம்பித்தது! அதைப் பார்த்துக் கொண்டிருந்த பிரம்மா, "பண்ட பண்ட!" என்றாராம்! 'பண்ட பண்ட' என்றால், 'நல்லது! நல்லது' என்று பொருள். பிரம்மா அப்படிச் சொன்னதனாலே, தவம் செய்து கொண்டிருந்த அந்தச் சாம்பல் வடிவத் துக்கே 'பண்ட' என்று பெயர் வந்தது. தவம் செய்த பண்ட சிவபெருமான் அருளால் ஆற்றல் பெற்றது.

## ஆற்றலும் அகங்காரமும்

எப்போதுமே சிக்கல் ஏன் எழுகிறது என்றால், ஆற்றல் கைவரும்போதுதான்! ஒன்றுமே இல்லாத சமயத்தில், 'நமக்கு ஏதேனும் கிடைக்காதா?' என்ற ஏக்கம் வரும்; ஆசை வரும். ஆனால், கையில் அது கிடைத்தவுடனேயே, நினைத்தது கிடைத்து விட்டதே என்கிற அகங்காரம் வந்து விடும்!

இந்தப் 'பண்ட', வெறும் சாம்பல் வடிவமாக இருந்த போது தவம் செய்தது. தவம் செய்ததனால் உயிர் பெற்றது. உயிரோடு சேர்ந்து ஆற்றலும் கிடைத்தது. கையில் ஆற்றல் வந்தவுடனேயே, என்னால் நான்கு பேரை அடிக்க முடியும் என்று நினைத்து பண்டன் பண்டாசுரனாக மாறியது! பண்ட- அசுரன் = நல்ல அசுரன்!

'அசுரன் என்றாலே கெட்டவன் தானே, நல்ல அசுரன் எப்படி இருக்க முடியும்? நல்ல கோபம் கெட்ட கோபம் என்று உண்டா என்ன!' என்று கேள்வி எழும்.

நல்லவர்களாக இருக்கக் கூடியவர்கள் கூட தங்களிடம் ஆற்றல் இருக்கிறது என்ற எண்ணம் வந்தால் தீயவர்களாக மாறிப் போவார்கள் என்பதைத்தான் பண்டா சுரன் வரலாறு கூறுகிறது.

சிவபெருமானே கொடுத்த ஆற்றலைக் கொண்டு பண்டாசுரன் எல்லோரையும் கஷ்டப்படுத்த ஆரம்பித்தபோது, தேவர்க ளெல்லாம் கூடினார்கள்; ரிஷிகளெல்லாம் கூடினார்கள். 'எங்களைக் காப்பாற்ற வேண்டும்' என்று சிவபெருமானிடத்திலே போய் முறையிட்டார்கள். சிவபெருமான் அம்பிகையைப் பார்த்தார் - இது லலிதோபாக்கியானம் சொல்லக் கூடிய கதை.

அப்படி சிவபெருமான் அம்பிகை யைப் பார்த்ததும் அவள் லலிதாம்பிகை யாக திருவவதாரம் எடுக்கத் தீர்மானம் செய்தாள். அப்படித் திருவவதாரம் எடுத் தவள், தேவேந்திரன் செய்த யாகத்தில், ஹோம குண்டத்தில் தோன்றினாள்.

## ஸேனாதிபதிகள்

அவ்வாறு தோன்றியவள் என்னவெல் லாம் செய்தாள் என்று சொல்லக் கூடியவைதாம் இதற் கப்புறம் வரக்கூடிய திருநாமங்கள்.

சரி, அவள் என்ன செய்தாள்...?

**பண்டாஸுர வதோத்யுக்த சக்தி ஸேனா ஸமன்விதா**

தேவரிஷிகளும் தேவர்களும் கூடி நின்று தொழக்கூடியவளாக இருக்கக் கூடியவள், பண்டாசுரனை வதம் செய் வதற்காக ஏற்பட்ட சக்தி ஸேனையா னதும் தொழக்கூடியவளாக இருக்கிறாள்.

> **நல்லவர்களாக இருக்கக் கூடியவர்கள் கூட தங்களிடம் ஆற்றல் இருக்கிறது என்ற எண்ணம் வந்தால் தீயவர்களாக மாறிப் போவார்கள்**

அந்த சக்தி ஸேனையின் தொழு கைக்கு உரியவளே **ஸம்பத்கரீ ஸமாரூட ஸிந்துரவ்ரஜஸேவிதா**. அவளே **அச்வாரூடா**.

ஸம்பத்கரீ, அச்வாரூடா என்ற இரு திருநாமங்கள் முக்கியமானவை.

இவற்றுக்கு அப்புறம் வருபவை ரதங் களைப் பற்றி வரக்கூடிய பெயர்கள், விவ ரங்கள்:

சக்ரராஜ ரதம் என்று ஒன்று, கேய சக்ர ரதம் என ஒன்று, கிரி சக்ர ரதம் என்று ஒன்று.

- இந்த மூன்று ரதங்களும் அவளுடைய

யவை!

அம்பாள் யுத்தத்துக்குப் புறப்படுகிறாள் என்றால், ரத - கஜ - துரக - பதாதிகள் ஆஜராகிவிடமாட்டார்களா!

இதற்காகத்தான் **பண்டாஸுரவதோத்யுக்த சக்திஸேனா ஸமன்விதா** என்று முன்னமேயே சக்தி ஸைன்யம் ஆஜரானதை ஒரு திருநாமம் குறிப்பிட்டிருக்கிறது.

சாதாரண ஸைன்யமல்ல அது; சக்தி ஸைன்யம். எல்லா சக்தியும் ஆற்றலும் சேர்ந்த ஸைன்யம். அதில் என்னவெல்லாம் இருக்கின்றன...?

யானைகள் இருக்கின்றன, குதிரைகள் இருக்கின்றன, அம்பாள் ஆரோகணித்து வருவதற்கான ரதங்கள் இருக்கின்றன. அம்பாளுடன் கூட வருவதற்குச் சில பேர் இருக்கிறார்கள் - உப தேவதைகள்.

கஜ - யானைப் படை இருக்கிறதே, அதற்குத் தலைவியாக ஒருத்தி வருகிறாள். அவள் பெயர் ஸம்பத்கரீ. அந்த ஸம்பத்கரீ யானைப்படையோடு வந்து அம்பாளை ஸேவிக்கிறாள். இப்படி அந்த ஸேவையை ஏற்றுக் கொள்ளக்கூடிய அம்பாள்தான் **ஸம்பத்கரீஸமாரூட - ஸிந்தூரவ்ரஜ ஸேவிதா.**

இன்னொரு பக்கத்தில் இன்னொருத்தி வருகிறாள். அவள் குதிரை மீது ஏறி வந்து அம்பாளைத் தொழுகிறாள். அவள் **அச்வாரூடா.**

யானைப் படையும் வந்தாயிற்று, குதிரைப் படையும் வந்தாயிற்று.

ஸம்பத்கரீ எதிலிருந்து தோன்றினாள் என்றால், அம்பாள் கையில் அங்குசம் இருக்கிறதல்லவா? அந்த அங்குசத்திலிருந்து தோன்றியவள் ஸம்பத்கரீ. யானையை அடக்க அங்குசம்தானே வேண்டும்!

அடுத்து, குதிரையை எப்படி அடக்குவது? அங்குசத்தைக் கொண்டு குதிரையை அடக்க முடியாது. கயிற்றைக் கொண்டுதான் கட்ட முடியும். குதிரைக்குச் சேணம், கடிவாளம் கட்டுவதற்குக் கூட கயிறு வேண்டும். அம்பாளுடைய பாசத்திலிருந்து - திருக்கரத்திலுள்ள பாசக் கயிற்றிலிருந்து - தோன்றியவள், குதிரை மீது ஆரோகணித்து வரக்கூடியவள் அசுவாரூடா!

(தொடரும்)





# "என் கனவு சினிமா!"

**ஆட்டோ ஓட்டுநராக இருந்து சின்னத்திரைக்குள் நுழைந்த போஸ், மக்கள் தொலைக்காட்சியில் ஒளிபரப்பான 'ஆட்டோ சங்கர்' சீரியலில் நடித்து மீண்டும் மக்கள் மனத்தில் இடம் பிடித்திருக்கிறார்.**

"கிராமத்திலிருந்து ஒண்ணுமே தெரியாம பிழைக்க வழி தேடி சென்னைக்கு வந்தவன் நான். ஆனா பத்து நாள் ஆட்டோ ஓட்டினதுல உலகம் அத்துபடி ஆயிடுச்சு. 'ஆட்டோ சங்கர்' சீரியல் வாய்ப்பு வந்தபோது ஆட்டோவுக்கும் எனக்குமான பந்தம் விட்டுப் போகலைன்னு தெரிஞ்சது. அவனோட வாழ்க்கை வரலாறை முழுசா படிச்சவுடனே, என்னால நடிக்க முடியுமான்னு கூட யோசிச்சேன். அந்த அளவுக்கு அவனொரு வினோதமான பிறப்பு. ஆனா இந்த சீரியலால மக்கள் மனசுல ஆட்டோ சங்கரைப் பத்தின எண்ணங்களெல்லாம் மாறிடுச்சு. அவனை ஏன் போலீஸ் தண்டிச்சதுன்னு நிறைய பேர் கேள்வி எழுப்பினாங்க. அவனோட வாழ்க்கையால எனக்கொரு சிறந்த கேரக்டர் கிடைச்சாலும் அவன் கெட்டவன்தான். அவனுக்காக வக்காலத்து பேசறது தவறு" என்கிற போஸ், 'மெட்டி ஒலி'க்குப் பிறகு இப்போதுதான் திருப்தியாக இருக்கிறார்.

" 'மெட்டி ஒலி'க்குப் பிறகு நான் அடுத்தடுத்து சீரியல் செஞ்சிருந்தா இந்நேரத்துக்கு இருபத்தைஞ்சாயிரம் ரூபாய் சம்பளம் வாங்குற ஆர்ட்டிஸ்டா வளர்ந்திருப்பேன். ஆனா என் கனவு சினிமா. என் துரதிருஷ்டம் நான் ரொம்ப நம்பின கரு.பழனியப்பனோட 'சதுரங்கம்' இன்னைக்கு வரைக்கும் ரிலீஸாகலை. ஆனாலும் இப்போ கைவசம் 'சிவாஜி', 'தாம் தூம்', 'மருதமலை', 'சூர்யா'ன்னு நாலு படங்கள் இருக்கு. நாலிலும் வில்லன் ரோல். 2007 முடியும்போது இந்த எல்லாப் படங்களும் ரிலீஸாகி போஸுக்கு ஒரு மாற்றத்தை தமிழ் சினிமாவுல ஏற்படுத்திக் கொடுக்கும். அடுத்த வருஷம் வித்தியாசமான கதைகள்ல ஹீரோவாக நடிக்கவும் ஏற்பாடுகள் நடந்திட்டு இருக்கு"

- பப்பி

படம்: ஸ்ரீஹரி

